



இப்பதிப்புக்குப் பொருளுதவி செய்துள்ள திரு. சேவு. லெ. ராம. நாராயணன் செட்டியாரவர்கள்
பத்மாஸனம் செய்யும் காட்சி

சிவமயம்

# பதிப்புரை

குடிமன்னு சாத்தனூர்க் கோக்குல மேய்ப்போன் குரம்பைபுக்கு
முடிமன்னு கூனற் பிறையாளன் தன்னை முழுத்தமிழின்
படிமன்னு வேதத்தின் சொற்படி யேபர விட்டென்உச்சி
அடிமன்ன வைத்தபி ரான்மூல னாகின்ற அங்கணனே.

—நம்பியாண்டார்நம்பிகள்

ஒன்றவன்தானாய், உலப்பிலிதேவர்கள் நக்கனென்றேத்திடு நாதனாய்ப், போற்றிசைத் தின்னுயிர்மன்னும் புனிதனாய் விளங்கும் முழுமுதற் கடவுள் அருட்டுணை கொண்டு, தமிழ்மறையும் பத்தாந் திருமுறையுமாகிய திருமந்திரம் என்னும் இந்நூல், நமது சமாஜத்தின் இரண்டாவது பதிப்பாக இன்று கோவூர் திருமேனீச்சரத்தில் எழுந்தருளியிருக்கும் தென்முகக் கடவுள் திருவடிகளிற் சமர்ப்பிக்கப்பெறுகின்றது. இவ்விரண்டாம் பதிப்பு வெளிவருதற்குப் பொருளுதவி செய்தவர் தேவகோட்டை சைவத் திருவாளர் - சேவு. லெ. ராம. நாராயணன் செட்டியார் அவர்களேயாவர். இப்பெரியார் இந்நூலிற் கூறப்படும் யோகாஸனங்கள் பலவற்றைச் செய்யும் பழக்கமுடையவர்; தனவணிக நாட்டில் "யோகி" என்று அழைக்கப்படுபவர்; நோயற்ற வாழ்வுடையவர். அச்சுத் தாள்களைத் திருவாளர் - மா. துரைசாமி முதலியாரவர்களும், திருவாளர் - திரு. வி. உலகநாத முதலியாரவர்களும் திருத்தி உதவினார்கள். சாது அச்சுக்கூடத்தினர் விரைவாகவும் செம்மையாகவும் அச்சிட்டு முடித்தனர். இப்பெரியார்கட்கெல்லாம் நமது சமாஜம் மனப்பூர்வமான நன்றி செலுத்துகின்றது.

இந்நூல், மெய்யன்பர்கட்குப் புறப்பட்டுப் புக்குத் திரிகின்ற வாயுவை நெறிப்பட உள்ளே நின்மலமாக்கும் வகையையும், காற்றைப் பிடிக்கும் கணக்கறிவையும், கூற்றை யுதைக்குங் குறியையும் புலப்படுத்துமாறு யோகியாய் யோகமுத்தியுதவும் தென்முகக் கடவுள் திருவடிகளை வழுத்துகின்றோம்.

இங்ஙனம்

விக்கிரமஸு வைகாசிமீ ௩௨ } ம. பாலசுப்பிரமணியன்
கோவூர் தேர்த்திருநாள் } காரியதரிசி

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருமூலர் வரலாறு*



கயிலாயத் தொருசித்தர் பொதியிற் சேர்வார்
காவிரிசூழ் சாத்தனூர் கருது மூலன்
பயிலாநோ யுடன்வீயத் துயர நீடும்
பசுக்களைக்கண் டவனுடலிற் பாய்ந்து போத
வயலாகப் பண்டையுடல் அருளான் மேவி
ஆவடுதண் டுறையாண்டுக் கொருபா வாகக்
குயிலாரு மரசடியி லிருந்து கூறிக்
கோதிலா வடகயிலை குறுகி னாரே.

—உமாபதிசிவாசாரியார்

திருக்கயிலாயமலைக் கோயிலுக்கு முதற் பெருநாயகமாகி இந்திரன் மாலயன் முதலாம் இமையவர்க்கு நெறியருளும் நந்தியெம் பெருமான் திருவருள் பெற்ற நான்மறையோகிகள் ஒருவர் (அணிமா முதலான அட்டமாசித்தியும் பெற்றவர்) அகத்திய முனிவரைக் கண்டு அவருடன் சிலநாள் வசிப்பதற்காகக் கயிலைமலையிலிருந்து பொதியமலை நோக்கிப் புறப்பட்டார். வழியிலே திருக்கேதாரம், பசுபதி நேபாளம், அவிமுத்தம் (= காசி), திருப்பருப்பதம், காளத்தி, ஆலங்காடு, ஏகம்பம் என்ற தலங்களில் இறைவனை வணங்கினார். காஞ்சியில் சில யோகியரைக் கண்டு நயந்து, திருவதிகை சென்று, பின்னர் தில்லையில் திருநடனங் கண்டு அங்குச் சிலநாள் தங்கிக் காவிரியைக் கடந்து, திருவாவடுதுறை சென்று தொழுதார். தொழுது மீளும்போது அவ்விடம் விட்டு "அகலாததொரு கருத்து முன்னி யெழுங்குறிப்பினால் மூளுமாதரவெய்தப் பின்னுமகன்று"

---

* இவ்வரலாறும் குறிப்பு முதலியனவும் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் பி.ஏ., பி.எல். அவர்களால் எழுதப்பட்டன.

சென்றார். செல்லும் வழியில் காவிரிக்கரையில் பசுக்கூட்டங்கள் அழுவதைக் கண்டார்.

அந்தணர் வாழ்கின்ற சாத்தனூரில் பசுமேய்ப்பார் குடியில் தோன்றிய மூலன் என்பான் வழக்கம்போல் ஒருநாள் பசுக்களை மேய்க்கும்போது, தனது வாழ்நாள் முடிவெய்த, நிலத்தில் வீழ்ந் திறந்தான். அவன் மேய்த்த பசுக்கள் அவன் உடம்பைச் சுற்றிச் சுற்றிக் கதறியழுதன. அவ்வழுகையைக்கண்ட சிவயோகியார் திருவருளாலே அப்பசுக்களின் துயரை நீக்கத் துணிந்து, தமது உடம்புக்குத் தகுந்த அரண்செய்து, கூடுவிட்டுக் கூடுபாயும் சித்தி யால் மூலன் உடம்பில் தமதுயிரைப் பாய்த்தினர். "பாய்த்தியபின் திருமூலராய் எழலும் பசுக்களெலாம், நாத்தழும்ப நக்கிமோந்து அணைந்து கனைப்பொடு நயந்து, வாய்த்தெழுந்த களிப்பினல் வாலெடுத்துத் துள்ளி" மேய்ந்தன. மாலைப்பொழுது வந்தவுடன் தத்தம் கன்றுகளை நினைந்து சாத்தனூருக்குத் திரும்பி, அவ்வவற் றின் வீடுகளுட் புகுந்தன. திருமூலர் எவ்வீட்டிலும் நுழையாமல் வெளியே நின்றார்.

இவ்வாறு இவர் நிற்பதைக்கண்ட மூலன் மனைவி திருமூலரைத் தனது கணவனென்றே எண்ணித் தொட்டழைக்க வந்தாள். ஆனல் திருமூலர் அதற்கிசையாது "இங்கு உனக்கு என்னுடன் அணை வொன்றில்லையென எதிர்மறுத்து" ஒரு பொதுமடத்தினுட் புகுந்து சிவயோகத்தி லமர்ந்திருந்தார்.

அன்றிரவெல்லாம் தூங்காது வருந்திய மூலன் மனைவி மறுநாட் காலை நல்லார் பலரிடத்து முறையிட்டாள். அவர்கள் திருமூலர் நிட்டையிலிருப்பதைக் கண்டு, "பித்துற்ற மயலன்று, பிறிதொரு சார்புளதன்று, சித்தவிகற்பம் களைந்து தெளிந்த சிவயோகமே" அவர் இருக்கும் நிலையெனத் தெரிந்து அவர் இல்வாழ்க்கைக்கு உதவார் என்பதை மூலன் மனைவிக்குத் தெரிவித்தார்கள். அவள் துயரெய்தி மையலுற உடனிருந்தவர்கள் அவளைக் கொண்டகன்றார் கள்.

திருமூலர் பின்னர் நிட்டைவிட்டெழுந்து பசுக்கள் வந்த வழியே மீண்டுத் தாம் அரண்செய்து வைத்த தமதுடலைக் காணது, மெய்ஞ்ஞானத்தால் ஆராய்ந்து, சிவபெருமான் தந்த, ஆகமப் பொருளை மண்ணின்மிசைத் தமது வாக்கினல் தமிழ்வகுப்ப இறை வன் திருவுளங்கொண்டு தமதுடலைக் கரப்பித்தார் எனத் தெளிந்த னர். மூலனுடைய சுற்றத்தார் மீண்டும் தொடர அவர்களுக்குத்

தமது தொடர்பின்மையை நன்குய் விளக்கிப் பிறகு திருவாவடுதுறை சென்ருர்.

ஆங்கு இறைவனை வணங்கி மேற்குப் புறத்தில் மிகவுயர்ந்த ஓர் அரசமரத்தின் கீழ் அமர்ந்து சிவயோகம் புரிந்து மூவாயிரம் ஆண்டு இப்புவியிலிருந்து "ஒன்றவன்றுனென"த் தொடங்கி ஓராண்டுக் கொன்ருக மூவாயிரம் திருமந்திரமோதி மீண்டும் திருக்கயிலை சென்று "ஒருகாலும் பிரியாமைத்தாள் அடைந்தார்"

"ஊனுடம்பிற் பிறவிவிடந் தீர்ந்துலகத் தோருய்ய
ஞானமுதல் நான்குமலர் நல்திருமந் திரமாலை
பான்மைமுறை ஓராண்டுக் கொன்றகப் பரம்பொருளாம்
ஏனஎயி றணிந்தாரை ஒன்றவன்ற னெனஎடுத்து"

"முன்னியஅப் பொருண்மாலைத் தமிழ்மூவா யிரஞ்சாத்தி
மன்னியமூ வாயிரத்தாண் டிப்புவிமேல் மகிழ்ந்திருந்து
சென்னிமதி யணிந்தார்தம் திருவருளாற் றிருக்கயிலை
தன்னிலணைந் தொருகாலும் பிரியாமைத் தாளடைந்தார்"

இவ்வரலாறு சேக்கிழார் பெருமான் திருவாக்கால் திருத்தொண்டர் புராணத்துள் இருபத்தெட்டு இனிய பாக்களாற் கூறப்பட்டுள்ளது. இவ்வரலாற்றுக் காதரவான குறிப்புக்களும் இவ்வரலாற்றிற் காணப்பெருத செய்திகளை யறிவிக்கும் குறிப்புக்களும் திருமந்திரத்தில் காணப்படுகின்றன. இக்குறிப்புக்களைத் திரட்டுங்கால், பாயிரமுட்பட திருமந்திரம் முழுமையும் திருமூலர் வாக்கென்றே எண்ணிக் கொள்ளவேண்டும்.

திராவிடமாபாடிய ஆசிரியர் சிவஞான சுவாமிகள் காலத்திலிருந்த சாஸ்திரஞ் சுவாமிநாதத் தம்பிரான் சுவாமிகளாற் பாடப்பெற்றதும், திருவாவடுதுறை ஆதீனத்து கஉ-வது பட்டமாகிய திருச்சிற்றம்பல தேசிகசுவாமிகள் காலத்து (ஏறக்குறைய நூற்றைம்பது ஆண்டுகட்குமுன்) அரங்கேறியதும், இரண்டாயிரத்துக்கு மேற்பட்ட செய்யுட்களையுடையதும், இதுவரை அச்சில் வெளிவராததுமாகிய திருவாவடுதுறைப் புராணத்தில் "திருமூலரைத் தடுத்தாட்கொண்ட சருக்கம்" ஒன்றுளது. அதில் கீழே காணும் மாறுபாடுகளோடு பெரியபுராண வரலாற்றை யொட்டியே திருமூலர் சரிதை கூறப்படுகின்றது. மூலன் உடலிற் புகவேண்டுமென்ற பவவினை

திருமூலருக் குண்மையின் அவர் அவ்வாறு புகநேர்ந்ததென்றும், திருமூலர் அரண் செய்து வைத்த தமது சொந்த உடலைப் போதி யின்கீழ் மறையப் பொதிந்து இறைவனே வைத்ததாகவும் இப் புராணம் கூறுவதோடு திருமந்திரம் வெளிப்பட்ட விதத்தையும் கீழ்வரும் செய்யுளால் தெரிவிக்கின்றது.

"அறிவான் மிகுந்த சித்தர்குழாம் அலேகத் தெழுதி யவரவரே
நெறியா லுணர்ந்து களித்துலக முழுது முணர நிரப்பினர்கள்
பிறியாச் சிவபோ கம்புசிக்கு மூல ரின்றும் பிரானடியிற்
செறிவா மியோகுற் றிருந்தனர்சீ ரூழி பலவும் சென்றனவால்"

"ஒன்றவன்" "நந்தியருள் பெற்ற" முதலிய முப்பது பாடல்களின் கருத்தமைதிகள் இப்புராணத்திற் கூறப்பட்டுள்ளன.

**திருமூலர் காலத்தைப்பற்றிய குறிப்புகள்**:—(1) மன்று தொழுத பதஞ்சலியும் தம்மோடு நந்தியருள் பெற்றவருள் ஒருவர் என்று 67-ம் பாட்டில் திருமூலர் கூறுகிறார். மகாபாஷ்யம் இயற் றிய பதஞ்சலி வேறு, யோக சூத்திரம் இயற்றிய பதஞ்சலி வேறு என சம்ஸ்கிருத நூல் வரலாற்றாசிரியர் டாக்டர் கீத் (Dr. A. B. Keith) என்பவர் கருதுகிறார். முற்கூறிய பதஞ்சலியார் கி. மு. 150-ல் இருந்தவரென்றும் பிற்கூறியவர் கி. பி. ஏழாம் நூற்றாண்டி லிருந்த மாகன் என்ற கவிக்கு முந்தியவரென்றும் அவ்வாசிரியர் கூறுகிறார். முற்கூறிய பதஞ்சலியே திருமூலருடன் நந்தியருள் பெற்ற நாதருள் ஒருவர் எனக் கொண்டாலும் திருமூலர் கி. மு. 150-ம் ஆண்டுக்கு முற்பட்டவரென்று கொள்ள இயலாது. (2) திருத்தொண்டத் தொகையிலும், நம்பியாண்டார் நம்பிகள் திருத்தொண்டர் திருவந்தாதியிலும் சேக்கிழார் திருத்தொண்டர் புராணத்திலும் திருமூலரும் அவர் வரலாறும் கூறப்பெறுதலால் திரு மூலர் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டுக்கு முந்தியவரென்பதில் ஐய மில்லை. (3) திருமந்திரத்து 204-ம் செய்யுளின் இரண்டாம் அடி இந்நூலின் ருச-ம் பக்கத்திலுள்ள குறிப்பின்படி (கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த) யாப்பருங்கல விருத்தியில் குறிக்கப்பட் டிருத்தலும் இம்முடிபை வலியுறுத்தும். (4) திருவாசகத்துக்கும் திருமந்திரத்துக்கும் பலவகையான சொல், சொற்றொடர், கருத்து ஒற்றுமைகள் காணப்படுதலால் இவ்விரண்டு நூல்கட்கும் ஒரு தொடர்பிருத்தல் வேண்டும். மாணிக்கவாசகர் கி. பி. மூன்றாம்

நூற்றாண்டினரென்ற மரபின்படி திருமூலர் கி. பி. மூன்றாம் நூற்றாண்டின் பிற்பட்டவராதல் வேண்டும். மாணிக்கவாசகரை கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டினராகக் கொள்வோர் திருமூலரை அவருக்கு முந்தியவராகக் கொள்ளவேண்டும். திருமந்திரத்து 2651-ம் செய்யுளிற் கூறப்படும் பெருந்துறை, திருப்பெருந்துறை, திருவாவடுதுறை பொதுவாகக் கடவுள் அருட்டுறை என்பவற்றில் ஒன்றைக் குறிக்க வேண்டும். இச்சொல்லிலிருந்துமட்டும் திருமூலர் மாணிக்கவாசகருக்குப் பிற்பட்டவரென்று திடமாகக் கூறவியலாது. (5) திருஞானசம்பந்தர் திருவாவடுதுறைக்குச் சென்ற காலத்துப் பலிபீடத்தினருகில் மணங்கமழ்ந்ததென்றும் அகழ்ந்து பார்த்தபோது திருமந்திரநூற் பிரதி கிடைத்ததென்றும் ஒரு வரலாறு கர்ண பரம்பரையாக வுள்ளதெனச் சில தேவாரப் பிரதிகளிற் குறிக்கப்பட்டுளது. இவ்வரலாறு உண்மையாயின் திருமூலர் திருஞானசம்பந்தர் காலத்துக்கு (கி. பி. 600 - 650) முந்தியவராவார். ஆனால் இவ்வரலாறு பெரிய புராணத்திலாவது திருவாவடுதுறைப் புராணத்திலாவது கூறப்படவில்லை. மேலும் திருமந்திரம் வெளிப்பட்ட முறை திருவாவடுதுறைப் புராணத்தில் மேலே கண்டபடி வேறுவிதமாகக் கூறப்பட்டுளது. மேற்கூறிய பொருள்களையெல்லாம் ஒப்புநோக்கி முடிவு கூறின் பொதுவாகத் திருமூலர் காலம் கி. மு. 150-க்குப் பின் கி. பி. 900-க்கு முன் என்ற காலமாகும். பெரும்பாலும் கி. பி. மூன்றாம் நூற்றாண்டுக்குப் பின்னும் கி. பி. ஏழாம் நூற்றாண்டுக்கு முன்னும் இருந்த காலவளவையாயிருத்தல் கூடும். திருமூலர் திருஞானசம்பந்தருக்கு முந்தியவரென்றே உயர் திருவாளர்கள் - மறைமலையடிகள், கா. சுப்பிரமணிய பிள்ளை, டாக்டர் - வை. வே. இரமண சாஸ்திரிகள் முதலியோர் கருதுகின்றனர்.

திருமந்திரம் தமிழ்முதல் நூலா, மொழிபெயர்ப்பா ? :— டாக்டர் - வை. வே. இரமண சாஸ்திரிகள் திருமந்திரம் மொழிபெயர்ப்பென்றும் திருமூலர் கயிலையிலிருந்து " ஸ்ரீமந்த்ர மாலிகா " என்றொரு வடமொழி நூலைக் கொண்டுவந்து தமிழில் மொழிபெயர்த்தாரென்றும் கூறுகின்றார். பெரிய புராணத்திலும் திருவாவடுதுறைப் புராணத்திலும் இவ்வரலாறு கூறப்படவில்லை. மேலும் மொழிபெயர்ப்புக்கு மூவாயிரம் ஆண்டு தேவையில்லை, ஆண்டுக்கொரு பாடல் சொல்லவும் தேவையில்லை, வடமொழியில் இப்போது " ஸ்ரீமந்த்ர மாலிகா " என்றொரு நூல் இருப்பதாகவும்

திருமூலருக் குண்மையின் அவர் அவ்வாறு புகநேர்ந்ததென்றும், திருமூலர் அரண் செய்து வைத்த தமது சொந்த உடலைப் போதி யின்கீழ் மறையப் பொதிந்து இறைவனே வைத்ததாகவும் இப் புராணம் கூறுவதோடு திருமந்திரம் வெளிப்பட்ட விதத்தையும் கீழ்வரும் செய்யுளால் தெரிவிக்கின்றது.

"அறிவான் மிகுந்த சித்தர்குழாம் அலைகத் தெழுதி யவரவரே
நெறியா லுணர்ந்து களித்துலக முழுது முணர நிரப்பினர்கள்
பிறியாச் சிவபோ கம்புசிக்கு மூல ரின்றும் பிரானடியிற்
செறிவா மியோகுற் றிருந்தனர்நீ டூழி பலவும் சென்றனவால்"

"ஒன்றவன்" "நந்தியருள் பெற்ற" முதலிய முப்பது பாடல்களின் கருத்தமைதிகள் இப்புராணத்திற் கூறப்பட்டுள்ளன.

**திருமூலர் காலத்தைப்பற்றிய குறிப்புகள்:**—(1) மன்று தொழுத பதஞ்சலியும் தம்மோடு நந்தியருள் பெற்றவருள் ஒருவர் என்று 67-ம் பாட்டில் திருமூலர் கூறுகிறார். மகாபாஷ்யம் இயற்றிய பதஞ்சலி வேறு, யோக சூத்திரம் இயற்றிய பதஞ்சலி வேறு என சம்ஸ்கிருத நூல் வரலாற்றாசிரியர் டாக்டர் கீத் (Dr. A. B. Keith) என்பவர் கருதுகிறார். முற்கூறிய பதஞ்சலியார் கி. மு. 150-ல் இருந்தவரென்றும் பிற்கூறியவர் கி. பி. ஏழாம் நூற்றாண்டி லிருந்த மாகன் என்ற கவிக்கு முந்தியவரென்றும் அவ்வாசிரியர் கூறுகிறார். முற்கூறிய பதஞ்சலியே திருமூலருடன் நந்தியருள் பெற்ற நாதருள் ஒருவர் எனக் கொண்டாலும் திருமூலர் கி. மு. 150-ம் ஆண்டுக்கு முற்பட்டவரென்று கொள்ள இயலாது. (2) திருத்தொண்டத் தொகையிலும், நம்பியாண்டார் நம்பிகள் திருத்தொண்டர் திருவந்தாதியிலும் சேக்கிழார் திருத்தொண்டர் புராணத்திலும் திருமூலரும் அவர் வரலாறும் கூறப்பெறுதலால் திருமூலர் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டுக்கு முந்தியவரென்பதில் ஐய மில்லை. (3) திருமந்திரத்து 204-ம் செய்யுளின் இரண்டாம் அடி இந்நூலின் ௩௪-ம் பக்கத்திலுள்ள குறிப்பின்படி (கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த) யாப்பருங்கல விருத்தியில் குறிக்கப்பட் டிருத்தலும் இம்முடிபை வலியுறுத்தும். (4) திருவாசகத்துக்கும் திருமந்திரத்துக்கும் பலவகையான சொல், சொற்றொடர், கருத்து ஒற்றுமைகள் காணப்படுதலால் இவ்விரண்டு நூல்கட்கும் ஒரு தொடர்பிருத்தல் வேண்டும். மாணிக்கவாசகர் கி. பி. மூன்றாம்

நூற்றாண்டினரென்ற மரபின்படி திருமூலர் கி. பி. மூன்றாம் நூற்றாண்டின் பிற்பட்டவராதல் வேண்டும். மாணிக்கவாசகரை கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டினராகக் கொள்வோர் திருமூலரை அவருக்கு முந்தியவராகக் கொள்ளவேண்டும். திருமந்திரத்து 2651-ம் செய்யுளிற் கூறப்படும் பெருந்துறை, திருப்பெருந்துறை, திருவாவடுதுறை பொதுவாகக் கடவுள் அருட்டுறை என்பவற்றில் ஒன்றைக் குறிக்க வேண்டும். இச்சொல்லிலிருந்துமட்டும் திருமூலர் மாணிக்கவாசகருக்குப் பிற்பட்டவரென்று திடமாகக் கூறவியலாது. (5) திருஞானசம்பந்தர் திருவாவடுதுறைக்குச் சென்ற காலத்துப் பலிபீடத்தினருகில் மணங்கமழ்ந்ததென்றும் அகழ்ந்து பார்த்தபோது திருமந்திரநூற் பிரதி கிடைத்ததென்றும் ஒரு வரலாறு கர்ண பரம்பரையாக வுள்ளதெனச் சில தேவாரப் பிரதிகளிற் குறிக்கப்பட்டுளது. இவ்வரலாறு உண்மையாயின் திருமூலர் திருஞானசம்பந்தர் காலத்துக்கு (கி. பி. 600 - 650) முந்தியவராவார். ஆனால் இவ்வரலாறு பெரிய புராணத்திலாவது திருவாவடுதுறைப் புராணத்திலாவது கூறப்படவில்லை. மேலும் திருமந்திரம் வெளிப்பட்ட முறை திருவாவடுதுறைப் புராணத்தில் மேலே கண்டபடி வேறுவிதமாகக் கூறப்பட்டுளது. மேற்கூறிய பொருள்களையெல்லாம் ஒப்புநோக்கி முடிவு கூறின் பொதுவாகத் திருமூலர் காலம் கி. மு. 150-க்குப் பின் கி. பி. 900-க்கு முன் என்ற காலமாகும். பெரும்பாலும் கி. பி. மூன்றாம் நூற்றாண்டுக்குப் பின்னும் கி. பி. ஏழாம் நூற்றாண்டுக்கு முன்னும் இருந்த காலவளவையாயிருத்தல் கூடும். திருமூலர் திருஞானசம்பந்தருக்கு முந்தியவரென்றே உயர் திருவாளர்கள் - மறைமலையடிகள், கா. சுப்பிரமணிய பிள்ளை, டாக்டர் - வை. வே. இரமண சாஸ்திரிகள் முதலியோர் கருதுகின்றனர்.

திருமந்திரம் தமிழ்முதல் நூலா, மொழிபெயர்ப்பா ? :— டாக்டர் - வை. வே. இரமண சாஸ்திரிகள் திருமந்திரம் மொழிபெயர்ப்பென்றும் திருமூலர் கயிலையிலிருந்து “ ஸ்ரீமந்த்ர மாலிகா ” என்றொரு வடமொழி நூலைக் கொண்டுவந்து தமிழில் மொழிபெயர்த்தாரென்றும் கூறுகின்றார். பெரிய புராணத்திலும் திருவாவடுதுறைப் புராணத்திலும் இவ்வரலாறு கூறப்படவில்லை. மேலும் மொழிபெயர்ப்புக்கு மூவாயிரம் ஆண்டு தேவையில்லை, ஆண்டுக்கொரு பாடல் சொல்லவும் தேவையில்லை, வடமொழியில் இப்போது “ ஸ்ரீமந்த்ர மாலிகா ” என்றொரு நூல் இருப்பதாகவும்

எப்போதாவது இருந்ததாகவும் தெரியவில்லை, எனவே திருமந்திரம் தமிழ்முதல் நூலே மொழிபெயர்ப்பல்லவென்று திடமாய்க் கூறலாம். வடமொழியிலுள்ள ஆகமப் பொருள்களைத் தமிழில் கூறுவதாகத் திருமூலர் 81-ம் பாட்டில் சொல்வதிலிருந்து திருமந்திரம் மொழிபெயர்ப்பென்று ஏற்படாது. ஆகமப் பொருளை நன்றாக மனதிற் பதித்து தமது மொழியிலே திருமந்திரமாகச் செய்தார் என்பதே போதரும்.

ஒரே பாட்டு இருமுறை அல்லது மும்முறை வந்துள்ளதைக் காட்டும் அட்டவணை. எண்கள் பாட்டெண்கள்:—அகன்றன் 448, 3011. அகாரமுயிரே 975, 2503. அண்ணலிருப்பிட 766, 2660. அத்தத்து 2452, 2582. அவ்வுலக 1652, 1869. அறிவறிவென்ற 2362, 2637. அறிவாயசத் 617, 2471. ஆகியவச் 2493, 2570. ஆதாரசோதனை 1492, 1707. ஆமத்தினி 973, 1213. ஆயுமலரின் 1711, 2359. ஆவனவாவ 504, 2175. ஆறேயருவி 2530, 2979. இமைந்தனள் 972, 1115. இரவும் பகலும் 1134, 1528. இராப்பகல் 331, 1856. உணர்ந்தெழு 1222, 1306. உணர்வுடை 1786, 2938. உணர்வுமவனே 2857, 3035. உண்ணீர் 336, 882. உய்ந்தன 1460, 2622. ஊழிதோறூழி 1458, 1846. எழுந்துநீர் 72, 553. ஏறுடை 1862, 2111, ஏனோர் பெருமை 490, 2012, 3024. ஐம்பதெழுத் 965, 2698. ஒன்றிய 185, 863. ஒன்றுமிரண்டு 236, 2536. ஓலக்கஞ் 108, 540. காயக்குழப் 2071, 2550. கானுறுகோடி 1452, 1848. குறிப்பினுள் 587, 1794. கூடகில்லா 2093, 2559. கொல்லையின் 2016, 2903. சத்திசிவன் 492, 1771. சிவன் முதல் 106, 990. சைவப்பெருமை 1478, 1567. தரிக்கின்ற 1589, 1782. தலைநின்ற 2597, 2845. தானே இருநில 10, 1165. தானேதிசை 412, 2967. துரியமடங்கி 2498, 2572. தேடுந்திசை 406, 414. தோம்பதந் 2441, 2473, 2826. நின்றது 403, 438. பின்னெய்த 1586, 1629. போகின்ற 457, 2926. போற்றுகின்றேன் 884, 2988. மண்ணொன்று 440, 2351. விந்துவும் 961, 1971.

அந்தாதித் தொடையில் வந்துள்ள பாடல்களின் அட்டவணை:- 113—142, 381—387, 475—480, 481—486, 674—703, 712—714, 715—719, 740—788, 803—824, 825—844, 884—913, 919—929, 936—948, 1015—1044, 1045—1074, 1075—1124, 1125—1154, 1155—1290, 1291—1296.

1297—1306, 1308—1318, 1319—1418, 1803—1806, 1809—1813, 1814—1817, 1925—1936, 1937—1945, 1948—1952, 1953—1968, 2373—2381, 2382—2386, 2388—2391, 2393—2396, 2419—2423, 2467—2469, ஆ 590 பாடல்கள்.

திருமந்திரப் பொருள் விளக்கம் :—திருமந்திரப் பாடல்களுக்கு உரை காணும் முயற்சி நெடுநாளாக நடைபெற்று வந்துள்ளது. மதுரைத் தமிழ்ச்சங்கத்தினர் நூறு பாட்டுக்குரையென்றொரு நூல் வெளியிட்டனர். கோயமுத்தூரை யடுத்த புதுமதுரை திரு. C.S. சுந்தரமுதலியாரவர்கள் உபதேசப்பகுதி என்ற 113–142 எண்ணுள்ள பாடல்கட்குரை யெழுதி வெளியிட்டனர். திரு. மா. வே. விசுவநாத பிள்ளையவர்கள் பதிப்பில் திருமந்திரம் முழுமைக்கும் உரைக்குறிப்பு தரப்பட்டுள்ளது. சில அன்பர்கள் பத்திரிகைகளிற் கட்டுரைகளாகச் சிற்சில பாடல்கட்கு உரையெழுதியுள்ளனர். இவ்வுரைகளெல்லாம் ஓரளவு நூற்கருத்தை யறியத் துணை செய்கின்றன. சிறந்த யோகானுபவம் உடைய சைவப்பெரியார்கள் யோகத்திற் பிறரைப் பயில்வித்து அவ்வப்போது அனுபவ வாயிலாகப் பல நுட்பங்களை விளக்கினாலன்றித் திருமந்திர நுண்பொருள்கள் உணரப்படுமாறில்லை யென்பது பேரறிஞர் பலர் கருத்து. இப்போது யோகநுட்பங்களை மேல்நாட்டு அறிவியலாராய்ச்சி முறையிற் பரிசோதித்துப் பல முடிபுகளைச் சில அறிஞர்கள் வெளியிட்டுள்ளனர். பம்பாய் மாகாணத்திலுள்ள Lonavla என்ற இடத்தில் Kaivalyadhama எனப் பெயரிய ஒரு யோகப்பயிற்சி நிலையம் செம்மையாக நடைபெற்று வருகிறது. அந்நிலையத் தலைவர் திரு. சுவாமி குவலயானந்தரவர்கள் ஆங்கிலமும் வடமொழியும் கற்று வைத்தியசாத்திரமுறையில் நிலையத்தை நடத்துகிறார். அவரியற்றிய "ஆஸனங்கள்", "பிராணாயாமம்", "யோகமீமாஞ்சை" என்ற ஆங்கில நூல்களைப் பயின்றால் திருமந்திரத்திலுள்ள பல நுட்பங்கள் எளிதிற் புலனாகுமென்று உறுதியாய்க் கூறலாம். டாக்டர் ரேளே என்பவர் இயற்றிய "தி மிஸ்டீரியஸ் குண்டலினி" என்ற நூலும், ஸர்ஜான் வுட்ராப் இயற்றிய "தி ஸெர்பென்ட் பவர்" என்ற நூலும் பெரிதும் துணை செய்வன. லலிதாஸஹஸ்ரநாம பாஷ்யத்திலும் பல நுட்பங்கள் விளக்கப்பட்டுள்ளன.

மிகச் சுருக்கமாகக் கூறின் உடம்பிலுள்ள பல கூறுகளைத் தேய்வின்றிப் பாதுகாத்து, நரம்புத்தொகுதிகளைத் தன்வசப்படுத்திக்

குண்டலிசக்தியை எழுப்பிச் சிரசிலுள்ள பிரமரந்திரத்தின் வழியாகச் செலுத்தி, ஆங்குள்ள பெருவெளியில் அமிர்தத்தை ஊற்றெடுக்கச் செய்து, ஆங்குறையும் ஒளிவடிவாகிய இறைவனைத் தரிசித்து இன்புற்று அவ்வியாபகத்துள் அடங்கி நிற்றலே திருமந்திரம் கூறும் சிறந்த யோகமென்று கூறலாம்.

திருமந்திரத்திலும் வேறு சில நூல்களிலும் கூறப்படும் யோகாஸனங்கள், பிராணயாமம் முதலிய மூச்சுப்பயிற்சிகள், முத்திரைகள் முதலியன மேற்கூறிய யோகத்திலுள்ள பல படிகளேயாம். இவை எவ்வாறு யோகசித்தி பெறுதற்குத் துணை செய்கின்றன வென்பது சுவாமி குவலயாநந்தர் இயற்றிய மேற்கூறிய நூல்களில் மிகத் தெளிவாக விளக்கப்பட்டுள்ளது. இந்நூல் வெளிவருதற்குப் பொருளுதவி செய்த திரு. நாராயணன் செட்டியார் அவர்களும் ஷெ சுவாமிகளிடம் சென்று பயிற்சி பெற்றவர்.

தென்முகக் கடவுள் திருவருளால் திருமந்திரம் சைவப் பெரியோர்களைத் தமிழ்நாட்டில் சிவயோகத்தில் நிறுத்தித் தமிழ் மக்கட்கு யோக நெறியின் நுட்பங்களைப் புலப்படுத்துக, தமிழ்நாடு யோக பூமியாகத் திகழ்வதாகுக.

சிவமயம்

# உள்ளுறை


| | பக்கம் | | பக்கம் |
|---|---|---|---|
| அகத்தியம் | 50 | அவவேடம் | 235 |
| அக்கினி காரியம் | 32 | அவாவறுத்தல் | 370 |
| அசபை | 128 | அவையடக்கம் | 14 |
| அசற்குருநெறி | 291 | அறஞ்செயான்திறம் | 39 |
| அசுத்த சைவம் | 201 | அறஞ்செய்வான்திறம் | 37 |
| அடித்தலையறியும் திறங் கூறல் | 344 | அறிவுதயம் | 334 |
| அடிமுடிதேடல் | 55 | அற்புதக்கூத்து | 392 |
| அடியார் பெருமை | 266 | அன்புசெய்வாரை அறிவன் சிவன் | 42 |
| அட்டமாசித்தி | 93 | அன்புடைமை | 40 |
| அட்டாங்க யோகப்பேறு | 92 | அஷ்டதளகமலமுக்குண அவத்தை | 358 |
| அட்டாங்க யோகம் | 80 | ஆகமச்சிறப்பு | 9 |
| அணைந்தோர் தன்மை | 419 | ஆகாசப்பேறு | 397 |
| அண்டலிங்கம் | 244 | ஆதனம் | 81 |
| அண்டாதிபேதம் | 326 | ஆதாரவாதேயம் | 165 |
| அதிகமாகக் காணப்படும் செய்யுள்கள் | 431 | ஆதித்தநிலைஅண்டாதித்தன் | 281 |
| அதிசூக்கும பஞ்சாக்கரம் | 385 | ஆத்மலிங்கம் | 250 |
| அதோமுக தெரிசனம் | 75 | ஆயுள் பரிட்சை | 111 |
| அத்துவாக்கள் | 310 | ஆறந்தம் | 336 |
| அநுக்கிரகம் | 64 | ஆறுதாரம் | 243 |
| அந்தணரொழுக்கம் | 33 | ஆறாந்தந்திரம் | 224–242 |
| அபக்குவன் | 239 | இதோபதேசம் | 299 |
| அபாத்திரம் | 73 | இயமம் | 80 |
| அமுரிதாரணை | 122 | இரண்டாம் தந்திரம் | 50–79 |
| அருச்சனை | 144 | இராசதோடம் | 35 |
| அருளுடைமையின் ஞானம் வருதல் | 234 | இலக்கணத்திரயம் | 364 |
| அருளொளி | 258 | இலிங்க புராணம் | 51 |
| அவத்தை பேதம் கீழா லவத்தை | 305 | இளமை நிலையாமை | 27 |
| | | உடலிற்பஞ்சபேதம் | 302 |
| | | உடல்விடல் | 304 |

| | பக்கம் | | பக்கம் |
|---|---|---|---|
| உட்சமயம் | 221 | கேவல சகல சுத்தம் | 316 |
| உபசாந்தம் | 355 | கேள்வி கேட்டமைதல் | 44 |
| உபதேசம் | 18 | கொல்லாமை | 29 |
| உயிர் நிலையாமை | 28 | சகமார்க்கம் | 211 |
| உள்ளுறை | xiii | சக்கரப்பேறு | 54 |
| ஊழ் | 404 | சங்காரம் | 62 |
| எட்டாந்தந்திரம் | 302–375 | சதாசிவலிங்கம் | 246 |
| எலும்புங் கபாலமும் | 55 | சத்திநிபாதம் தீவிரதரம் | 216 |
| ஏரொளிச்சக்கரம் | 178 | சத்திநிபாதம் தீவிரம் | 216 |
| ஏழாந்தந்திரம் | 243–301 | சத்திநிபாதம் மந்ததரம் | 215 |
| ஐந்தாந்தந்திரம் | 201–223 | சத்திநிபாதம் மந்தம் | 214 |
| ஐந்திந்திரிய மடக்குமருமை | 288 | சத்திபேதம் திரிபுரை சக்கரம் | 150 |
| ஐந்திந்திரியம் அடக்கு முறைமை | 289 | சத்திய ஞானனந்தம் | 400 |
| ஒளி | 380 | சந்திரயோகம் | 123 |
| ஒன்பதாந்தந்திரம் | 376–431 | சமாதி | 90 |
| கடவுள் வாழ்த்து | 1 | சமாதிக்கிரியை | 272 |
| கடுஞ்சுத்த சைவம் | 203 | சம்பிரதாயம் | 253 |
| கர்ப்பக்கிரியை | 66 | சரியை | 204 |
| கலவு செலவு | 327 | சரீரசித்தி உபாயம் | 105 |
| கலைநிலை | 103 | சர்வசிருஷ்டி | 56 |
| கல்லாமை | 46 | சர்வ வியாபி | 428 |
| கல்வி | 43 | சற்குருநெறி | 291 |
| கள்ளுண்ணாமை | 48 | சற்புத்திரமார்க்கம் | 212 |
| காரியகாரணவுபாதி | 354 | சன்மார்க்கம் | 209 |
| காலசக்கரம் | 107 | சாமீபம் | 214 |
| கிரியை | 205 | சாம்பவி மண்டலச் சக்கரம் | 184 |
| குருநிந்தை | 77 | சாயுச்சியம் | 214 |
| குருபாரம்பரியம் | 10 | சாரூபம் | 214 |
| குருபூசை | 263 | சாலோகம் | 213 |
| குருமடதரிசனம் | 376 | சிவகுருதரிசனம் | 224 |
| குருமட வரலாறு | 15 | சிவசொரூப தரிசனம் | 405 |
| கூடாவொழுக்கம் | 294 | சிவதரிசனம் | 404 |
| கேசரி யோகம் | 115 | சிவநிந்தை | 76 |
| கேடுகண்டிரங்கல் | 296 | சிவபூசை | 259 |

| | பக்கம் |
|---|---|
| சிவலிங்கம் | 252 |
| சிவவேடம் | 238 |
| சிவாதித்தன் | 284 |
| சிவானந்தக்கூத்து | 386 |
| சீவன் | 286 |
| சுத்தசைவம் | 201 |
| சுத்தநனவாதி பருவம் | 311 |
| சுத்தாசுத்தம் | 361 |
| சுந்தரக்கூத்து | 387 |
| சூக்கும பஞ்சாக்கரம் | 384 |
| சூனிய சம்பாஷணை | 406 |
| செல்வம்நிலையாமை | 25 |
| சொரூபஉதயம் | 402 |
| சோதனை | 373 |
| ஞாதுருஞானஞேயம் | 228 |
| ஞானகுருதரிசனம் | 377 |
| ஞானம் | 208 |
| ஞானலிங்கம் | 251 |
| ஞானவேடம் | 237 |
| ஞானாதித்தன் | 283 |
| ஞானிசெயல் | 370 |
| ஞானோதயம் | 399 |
| தக்கன்வேள்வி | 52 |
| தத்துவமசிவாக்கியம் | 364 |
| தவதூடணம் | 232 |
| தவம் | 231 |
| தவவேடம் | 236 |
| தாசமார்க்கம் | 213 |
| தாரணை | 85 |
| தானச்சிறப்பு | 37 |
| திதி | 60 |
| தியானம் | 87 |
| திரிமூர்த்திகளின் சேட்ட கனிட்ட முறைமை | 15 |
| திருக்கூத்துத்தரிசனம் | 386 |

| | பக்கம் |
|---|---|
| திருக்கோயிலிழிவு | 75 |
| திருநீறு | 237 |
| திருமந்திரத்தொகைச்சிறப்பு | 15 |
| திருமூலர் வரலாறு | 11 |
| திருவடிப்பேறு | 226 |
| திருவம்பலச்சக்கரம் | 132 |
| திருவருள்வைப்பு | 255 |
| திரோபவம் | 63 |
| தீர்த்தம் | 74 |
| துறவு | 230 |
| தூலபஞ்சாக்கரம் | 383 |
| தோத்திரம் | 422 |
| நடுவுநிலைமை | 47 |
| நல்குரவு | 31 |
| நவகுண்டம் | 146 |
| நவாக்கரிசக்கரம் | 187 |
| நவாவத்தை நவாபிமானி | 360 |
| நாலாந்தந்திரம் | 128–200 |
| நியமம் | 81 |
| நிராகாரம் | 220 |
| நின்மலாவத்தை | 327 |
| பக்குவன் | 240 |
| பசு | 286 |
| பசுவிலக்கணம் பிராணன் | 285 |
| பதிபசுபாசம் வேறின்மை | 341 |
| பதிப்புரை | iii |
| பதிவலியில் வீரட்டம் எட்டு | 50 |
| பதினொராந்தானமும் அவத்தை யெனக்காணல் | 326 |
| பத்தியுடைமை | 372 |
| பரலட்சணம் | 347 |
| பராவத்தை | 322 |
| பரியங்கயோகம் | 119 |
| பாட்டு முதற்குறிப்பகராதி | 435 |
| பாத்திரம் | 73 |

| | பக்கம் | | பக்கம் |
|---|---|---|---|
| பாயிரம் | 1–17 | முச்சூனியதொந்தத்தசி | 353 |
| பிட்சாவிதி | 268 | முச்சொரூபம் | 351 |
| பிண்டலிங்கம் | 246 | முதல்தந்திரம் | 18–49 |
| பிண்டாதித்தன் | 282 | முத்திபேதம்கருமநிருவாணம் | 406 |
| பிரணவசமாதி | 379 | முத்தியுடைமை | 373 |
| பிரத்தியாகாரம் | 84 | முத்திரைபேதம் | 269 |
| பிரளயம் | 53 | முத்துரியம் | 349 |
| பிராணாயாமம் | 82 | முப்பதம் | 345 |
| பிறன்மனைநயவாமை | 30 | முப்பரம் | 346 |
| புருடன் | 285 | முப்பாழ் | 354 |
| புலால்மறுத்தல் | 30 | மும்முத்தி | 351 |
| புவனாபதிசக்கரம் | 185 | மூவகைச்சீவவர்க்கம் | 71 |
| புறங்கூறாமை | 356 | மூன்றாந்தந்திரம் | 80–127 |
| புறச்சமயதூஷணம் | 217 | மோனசமாதி | 416 |
| பூரணக்குகைநெறிச்சமாதி | 271 | மோக்ஷநிந்தை | 363 |
| பூரணசக்தி | 161 | யாக்கை நிலையாமை | 22 |
| பெரியாரைத்துணைக்கோடல் | 79 | யோகம் | 206 |
| பொறையுடைமை | 78 | வயிரவச்சக்கரம் | 183 |
| பொற்பதிக்கூத்து | 388 | வயிரவிமந்திரம் | 154 |
| பொற்றில்லைக்கூத்து | 390 | வரையுரை மாட்சி | 418 |
| போசனவிதி | 268 | வாய்மை | 368 |
| போதன் | 287 | வாரசரம் | 114 |
| மகளிர்இழிவு | 31 | வாரசூலம் | 115 |
| மகேசுவரபூசை | 264 | வானச்சிறப்பு | 37 |
| மத்தியசாக்கிராவத்தை | 308 | விசுவக்கிராசம் | 367 |
| மயேசுரநிந்தை | 78 | விநாயகர்காப்பு | 1 |
| மணவாதித்தன் | 283 | விந்துற்பனம் | 274 |
| மார்க்கசைவம் | 202 | விந்துஜயம் போகசரவோட்டம் | 276 |
| முக்கரணம் | 352 | வேதச்சிறப்பு | 8 |
| முக்குண நிர்க்குணம் | 326 | | |
| முக்குற்றம் | 345 | | |

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருமந்திரம்

## விநாயகர் காப்பு

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே.

## 1. கடவுள் வாழ்த்து

1 *ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்
நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந் தான்ஐந்து
வென்றனன் ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச்
சென்றனன் தானிருந் தானுணர்ந் தெட்டே. க

2 போற்றிசைத் தின்னுயிர் மன்னும் புனிதனை
நாற்றிசைக் கும்நல்ல மாதுக்கு நாதனை
மேற்றிசைக் குள்தென் திசைக்கொரு வேந்தனுங்
கூற்றுதைத் தானையான் கூறுகின் றேனே. உ

3 ஒக்கநின் றானை உலப்பிலி தேவர்கள்
நக்கனென் றேத்திடு நாதனை நாள்தொறும்
பக்கநின் றார்அறி யாத பரமனைப்
புக்குநின் றுன்னியான் போற்றிசெய் வேனே. ௩

---

* சில பிரதிகளில் இதுவே முதற் செய்யுளாகக் காணப்படுகின்றது. பெரியபுராணம் 'திருமந்திரமாலை...ஒன்ற வன்றானெனவெடுத்து' (திருமூல நாயனார் புராணம், 26) என்று கூறுவதால் இது வலியுறுகின்றது. வேறு சில பிரதிகளில், இதுவும் அடுத்த செய்யுளும் முறைமாறிக் காணப்படுகின்றன.

4 அகலிடத் தார்மெய்யை அண்டத்து வித்தைப்
புகலிடத் தென்றனைப் போதவிட் டானைப்
பகலிடத் தும்இர வும்பணிந் தேத்தி
இகலிடத் தேஇருள் நீங்கிநின் றேனே. ச

5 சிவனொடொக் குந்தெய்வந் தேடினும் இல்லை
அவனொடொப் பார்இங்கு யாவரும் இல்லை
புவனங் கடந்தன்று பொன்னொளி மின்னுந்
தவனச் சடைமுடித் தாமரை யானே. ரு

6 அவனை ஒழிய அமரரும் இல்லை
அவனன்றிச் செய்யும் அருந்தவம் இல்லை
அவனன்றி மூவரால் ஆவதொன் றில்லை
அவனன்றி ஊர்புகு மாறறி யேனே. சு

7 முன்னையொப் பாயுள்ள மூவர்க்கு மூத்தவன்
தன்னையொப் பாயொன்றும் இல்லாத் தலைமகன்
தன்னையப் பாஎனில் அப்பனு மாய்உளன்
பொன்னையொப் பாகின்ற போதகத் தானே. எ

8 தீயினும் வெய்யன் புனலினுந் தண்ணியன்
ஆயினும் ஈசன் அருளறி வார்இல்லை
சேயினும் நல்லன் அணியன்நல் அன்பர்க்குத்
தாயினும் நல்லன் தாழ்சடை யோனே. அ

9 பொன்னாற் புரிந்திட்ட பொற்சடை யென்னப்
பின்னாற் பிறங்க இருந்தவன் பேர்நந்தி
என்னால் தொழப்படும் எம்இறை மற்றவன்
தன்னால் தொழப்படு வாரில்லை தானே. கூ

10 தானே இருநிலந் தாங்கிவிண் ணாய்நிற்குந்
தானே சுடும்அங்கி ஞாயிறுந் திங்களுந்
தானே மழைபொழி தையலு மாய்நிற்குந்
தானே தடவரை தண்கட லாமே. க௦

11 அயலும் புடையும்எம் ஆதியை நோக்கில்
இயலும் பெருந்தெய்வம் யாதுமொன் றில்லை

முயலும் முயலில் முடிவுமற் றாங்கே
பெயலும் மழைமுகிற் பேர்நந்தி தானே. கக

12 கண்ணுத லான்ஒரு காதலின் நிற்கவும்
எண்ணிலி தேவர் இறந்தார் எனப்பலர்
மண்ணுறு வார்களும் வானுறு வார்களும்
அண்ணல் இவன்என் றறியகி லார்களே. கஉ

13 மண்ணளந் தான்மல ரோன்முதல் தேவர்கள்
எண்ணளந் தின்ன நினைக்கிலார் ஈசனை
விண்ணளந் தான்தன்னை மேல்அளந் தாரில்லை
கண்ணளந் தெங்குங் கடந்துநின் றானே. கங

14 கடந்துநின் றான்கம லம்மல ராதி
கடந்துநின் றான்கடல் வண்ணன்எம் மாயன்
கடந்துநின் றான்அவர்க் கப்புறம் ஈசன்
கடந்துநின் றான்எங்கும் கண்டுநின் றானே. கச

15 ஆதியு மாய்அர னாய்உட லுள்நின்ற
வேதியு மாய்விரிந் தார்ந்திருந் தான்அருட்
சோதியு மாய்ச்சுருங் காததோர் தன்மையுள்
நீதியு மாய்நித்த மாகிநின் றானே. கரு

16 கோது குலாவிய கொன்றைக் குழற்சடை
மாது குலாவிய வாள்நுதல் பாகனை
யாது குலாவி அமரருந் தேவருங்
கோது குலாவிக் குணம்பயில் வாரே. கசு

17 காயம் இரண்டுங் கலந்து கொதிக்கினு
மாயங் கத்தூரி யதுமிகும் அவ்வழி
தேசங் கலந்தொரு தேவனென் றெண்ணினும்
ஈசன் உறவுக் கெதிரில்லை தானே. கஎ

18 அதிபதி செய்து அளகை வேந்தனை
நிதிபதி செய்த நிறைதவ நோக்கி
அதுபதி யாதரித் தாக்கம தாக்கின்
இதுபதி கொள்ளென்ற எம்பெரு மானே. கஅ

இதுபதி ஏலங் கமழ்பொழில் ஏழும்
முதுபதி செய்தவன் மூதறி வாளன்
விதுபதி செய்தவன் மெய்த்தவம் நோக்கி
அதுபதி யாக அமருகின் றானே. ௧௯

முடிவும் பிறப்பையும் முன்னே படைத்த
அடிகள் உறையும் அறனெறி நாடில்
இடியும் முழக்கமும் ஈசர் உருவங்
கடிமலர்க் குன்ற மலையது தானே. உ௦

வானப் பெருங்கொண்டல் மாலயன் வானவர்
ஊனப் பிறவி ஒழிக்கும் ஒருவனைக்
கானக் களிறு கதறப் பிளந்தஎங்
கோனைப் புகழுமின் கூடலு மாமே. உ௧

2 மனத்தில் எழுகின்ற மாயநன் னாடன்
நினைத்தது அறிவ னெனில்தான் நினைக்கிலர்
எனக்கிறை அன்பிலன் என்பர் இறைவன்
பிழைக்கநின் றார்பக்கம் பேணிநின் றானே. உ௨

3 வல்லவன் வன்னிக் கிறையிடை வாரண
நில்லென நிற்பித்த நீதியுள் ஈசனை
இல்லென வேண்டா இறையவர் தம்முதல்
அல்லும் பகலும் அருளுகின் றானே. உ௩

4 போற்றிசைத் தும்புகழ்ந் தும்புனி தன்னடி
தேற்றுமின் என்றுஞ் சிவனடிக் கேசெல்வ
மாற்றிய தென்று மயலுற்ற சிந்தையை
மாற்றநின் றார்வழி மன்னிநின் றானே. உ௪

25 பிறப்பிலி பிஞ்ஞகன் பேரரு ளாளன்
இறப்பிலி யாவர்க்கும் இன்பம் அருளும்
துறப்பிலி தன்னைத் தொழுமின் தொழுதால்
மறப்பிலி மாயா விருத்தமும் ஆமே. உ௫

26 தொடர்ந்துநின் றானைத் தொழுமின் தொழுதால்
படர்ந்துநின் றான்பரி பாரக முற்றுங்

கடந்துநின் றான்கம லம்மலர் மேலே
உடந்திருந் தானடிப் புண்ணிய மாமே. ௨௬

27 சந்தி எனத்தக்க தாமரை வாண்முகத்
தந்தமில் ஈசன் அருள்நமக் கேயென்று
நந்தியை நாளும் வணங்கப் படும்அவர்
புந்தியி னுள்ளே புகுந்துநின் றானே. ௨௭

28 இணங்கிநின் றான்எங்கு மாகிநின் றானும்
பிணங்கிநின் றான்பின்முன் னாகிநின் றானும்
உணங்கிநின் றான்அம ராபதி நாதன்
வணங்கிநின் றார்க்கே வழித்துணை யாமே. ௨௮

29 காணநில் லாயடி யேற்குற வாருளர்
நாணநில் லேன்உன்னை நான்தழு விக்கொளக்
கோணநில் லாத குணத்தடி யார்மனத்
தாணிய னாகி அமர்ந்துநின் றானே. ௨௯

30 வானின் றழைக்கும் மழைபோல் இறைவனுந்
தானின் றழைக்குங்கொல் என்று தயங்குவார்
ஆனின் றழைக்கு மதுபோல்என் நந்தியை
நானின் றழைப்பது ஞானங் கருதியே. ௩௦

31 மண்ணகத் தான்ஒக்கும் வானகத்தான் ஒக்கும்
விண்ணகத் தான்ஒக்கும் வேதகத் தான்ஒக்கும்
பண்ணகத் தின்னிசை பாடலுற் றானுக்கே
கண்ணகத் தேநின்று காதலித் தேனே. ௩௧

32 தேவர் பிரான்நம் பிரான்திசை பத்தையு
மேவு பிரான்விரி நீருல கேழையுந்
தாவு பிரான்தன்மை தானறி வாரில்லை
பாவு பிரான்அருட் பாடலு மாமே. ௩௨

33 பதிபல வாயது பண்டிவ் வுலகம்
விதிபல செய்தொன்று மெய்ம்மை உணரார்
துதிபல தோத்திரஞ் சொல்லவல் லாரும்
மதியிலர் நெஞ்சினுள் வாடுகின் றாரே. ௩௩

சாந்து கமழுங் கவரியின் கந்தம்போல்
வேந்தன் அமரர்க் கருளிய மெய்ந்நெறி
ஆர்ந்த சுடரன்ன ஆயிர நாமமும்
போந்தும் இருந்தும் புகழுகின் றேனே. ௩௪

5 ஆற்றுகி லாவழி யாகும் இறைவனைப்
போற்றுமின் போற்றிப் புகழ்மின் புகழ்ந்திடில்
மேற்றிசைக் குங்கிழக் குத்திசை எட்டொடு
மாற்றுவன் அப்படி யாட்டவு மாமே. ௩௫

6 அப்பனை நந்தியை ஆரா அமுதினை
ஒப்பிலி வள்ளலை ஊழி முதல்வனை
எப்பரி சாயினும் ஏத்துமின் ஏத்தினால்
அப்பரி சீசன் அருள்பெற லாமே. ௩௬

7 நானும்நின் றேத்துவன் நாள்தொறும் நந்தியைத்
தானும்நின் றான்தழல் தாமொக்கு மேனியன்
வானில்நின் றார்மதி போல்உடல் உள்ளுவந்
தூனில்நின் றாங்கே உயிர்க்கின்ற வாறே. ௩௭

38 பிதற்றொழி யேன்பெரி யான்அரி யானைப்
பிதற்றொழி யேன்பிற வாஉரு வானைப்
பிதற்றொழி யேன்எங்கள் பேர்நந்தி தன்னைப்
பிதற்றொழி யேன்பெரு மைத்தவன் நானே. ௩௮

39 வாழ்த்தவல் லார்மனத் துள்ளுறு சோதியைத்
தீர்த்தனை அங்கே திளைக்கின்ற தேவனை
ஏத்தியும் எம்பெரு மான்என் றிறைஞ்சியும்
ஆத்தஞ்செய் தீசன் அருள்பெற லாமே. ௩௯

40 குறைந்தடைந் தீசன் குரைகழல் நாடும்
நிறைந்தடை செம்பொனின் நேரொளி ஒக்கும்
மறைஞ்சடஞ் செய்யாது வாழ்த்தவல் லார்க்குப்
புறஞ்சடஞ் செய்வான் புகுந்துநின் றானே. ௪௰

41 சினஞ்செய்த நஞ்சுண்ட தேவர் பிரானைப்
நெஞ்சிடை போற்றவல் லார்க்குக்

கனஞ்செய்த வாள்நுதல் பாகனும் அங்கே
இனஞ்செய்த மான்போல் இணங்கிநின் றானே. ௪௧

42 போயரன் தன்னைப் புகழ்வார் பெறுவது
நாயக னுன்முடி செய்ததுவே நல்கு
மாயகஞ் சூழ்ந்து வரவல்ல ராகிலும்
வேயன தோளிக்கு வேந்தொன் றுந் தானே. ௪௨

43 அரனடி சொல்லி அரற்றி அழுது
பரனடி நாடியே பாவிப்ப நாளும்
உரனடி செய்தங் கொதுங்கவல் லார்க்கு
நிரனடி செய்து நிறைந்துநின் றானே. ௪௩

44 போற்றிஎன் பார்அம ரர்புனி தன்அடி
போற்றிஎன் பார்அசு ரர்புனி தன்அடி
போற்றிஎன் பார்மனி தர்புனி தன்அடி
போற்றிஎன் அன்புள் பொலியவைத் தேனே. ௪௪

45 விதிவழி அல்லதிவ் வேலை உலகம்
விதிவழி இன்பம் விருத்தமும் இல்லை
துதிவழி நித்தலுஞ் சோதிப் பிரானும்
பதிவழி காட்டும் பகலவ னுமே. ௪௫

46 அந்திவண் ணாஅர னேசிவ னேஎன்று
சிந்தைசெய் வண்ணந் திருந்தடி யார்தொழ
முந்திவண் ணாமுதல் வாபர னேஎன்று
புந்தி வண்ணன்எம் மனம்புகுந் தானே. ௪௬

47 மனையுள் இருந்தவர் மாதவர் ஒப்பர்
நினைவுள் இருந்தவர் நேசத்துள் நிற்பர்
பனையுள் இருந்த பருந்தது போல
நினையாத வர்க்கில்லை நின்இன்பந் தானே. ௪௭

48 அடியார் பரவும் அமரர் பிரானை
முடியால் வணங்கி முதல்வனை முன்னிப்
படியார் அருளும் பரம்பரன் எந்தை
விடியா விளக்கென்று மேவிநின் றேனே. ௪௮

பரைபசு பாசத்து நாதனை உள்ளி
உரைபசு பாசத் தொருங்கவல் லார்க்குத்
திரைபசு பாவச் செழுங்கடல் நீந்திக்
கரைபசு பாசங் கடந்தெய்த லாமே. ௪௯

கூடுவன் நெஞ்சிடை வைப்பன் பிரானென்று
பாடுவன் பன்மலர் தூவிப் பணிந்துநின்
றாடுவன் ஆடி அமரர்பி ரானென்று
நாடுவன் நானின் றறிவது தானே. ௫0

## 2. வேதச் சிறப்பு

வேதத்தை விட்ட அறம்இல்லை வேதத்தின்
ஓதத் தகும்அறம் எல்லாம் உளதர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
வேதத்தை ஓதியே வீடுபெற் றார்களே. ௧

2 வேதம் உரைத்தானும் வேதிய னாகிலன்
வேதம் உரைத்தானும் வேதா விளங்கிட
வேதம் உரைத்தானும் வேதியர் வேள்விக்காய்
வேதம் உரைத்தானும் மெய்ப்பொருள் காட்டவே. ௨

3 இருக்குரு வாம்எழில் வேதத்தி னுள்ளே
உருக்குணர் வாயுணர் வேதத்துள் ஓங்கி
வெருக்குரு வாகிய வேதியர் சொல்லுங்
கருக்குரு வாய்நின்ற கண்ணனு மாமே. ௩

4 திருநெறி யாவது சித்தசித் தன்றிப்
பெருநெறி யாய பிரானை நினைந்து
குருநெறி யாஞ்சிவ மாநெறி கூடும்
ஒருநெறி ஒன்றாக வேதாந்தம் ஓதுமே. ௪

55 ஆறங்க மாய்வரு மாமறை ஓதியைக்
கூறங்க மாகக் குணம்பயில் வாரில்லை
வேறங்க மாக விளைவுசெய் தப்புறம்
பேறங்க மாகப் பெருக்குகின் றாரே. ௫

56 பாட்டும் ஒலியும் பரக்குங் கணிகையர்
ஆட்டும் அறாத அவனியின் மாட்டாதார்
மேட்டு விருப்பார் விரதமில் லாதவர்
ஈட்டும் இடஞ்சென் றிகலலுற் றாரே. ௰

## 3. ஆகமச் சிறப்பு

57 அஞ்சன மேனி அரிவையோர் பாகத்தன்
அஞ்சொ டிருபத்து மூன்றுள ஆகமம்
அஞ்சலி கூப்பி அறுபத் தறுவரும்
அஞ்சா முகத்தில் அரும்பொருள் கேட்டதே. ௧

58 அண்ணல் அருளால் அருளுஞ் சிவாகமம்
எண்ணில் இருபத்தெண் கோடிநூ றாயிரம்
விண்ணவர் ஈசன் விழுப்பம் உரைத்தனர்
எண்ணிநின் றப்பொருள் ஏத்துவன் நானே. ௨

59 பண்டித ராவார் பதினெட்டுப் பாடையுங்
கண்டவர் கூறுங் கருத்தறி வார்என்க
பண்டிதர் தங்கள் பதினெட்டுப் பாடையும்
அண்ட முதலான் அறஞ்சொன்ன வாறே. ௩

60 அண்ணல் அருளால் அருளுந்திவ் யாகமம்
விண்ணில் அமரர் தமக்கும் விளங்கரி
தெண்ணில் எழுபது கோடிநூ றாயிரம்
எண்ணிலும் நீர்மேல் எழுத்தது ஆகுமே. ௪

61 பரனாய்ப் பராபரங் காட்டி உலகிற்
றரனாய்ச் சிவதன்மந் தானேசொல் காலத்
தரனாய் அமரர்கள் அர்ச்சிக்கு நந்தி
உரனாகி ஆகமம் ஓங்கிநின் றானே. ௫

62 சிவமாம் பரத்தினிற் சத்தி சதாசிவம்
உவமா மகேசர் உருத்திர தேவர்
தவமால் பிரமீசர் தம்மில்தாம் பெற்ற
நவஆ கமம்எங்கள் நந்திபெற் றானே. ௬

63 பெற்றநல் ஆகமங் காரணங் காமிகம்
உற்றநல் வீரம் உயர்சிந்தம் வாதுளம்
மற்றவ் வியாமள மாகுங்கா லோத்தரந்
துற்றநற் சுப்பிரஞ் சொல்லு மகுடமே. எ

64 அண்ணல் அருளால் அருளுஞ் சிவாகமம்
எண்ணிலி கோடி தொகுத்திடு மாயினும்
அண்ணல் அறைந்த அறிவறி யாவிடின்
எண்ணிலி கோடியும் நீர்மேல் எழுத்தே. அ

65 மாரியுங் கோடையும் வார்பனி தூங்கநின்
றேரியு நின்றங் கிளைக்கின்ற காலத்து
ஆரிய முந்தமி ழும்உட னேசொலிக்
காரிகை யார்க்குக் கருணைசெய் தானே. கூ

66 அவிழ்க்கின்ற வாறும் அதுகட்டு மாறுஞ்
சிமிட்டலைப் பட்டுயிர் போகின்ற வாறுந்
தமிழ்ச்சொல் வடசொல் எனும்இவ் விரண்டும்
உணர்த்தும் அவனை உணரலு மாமே. க0

## 4. குரு பாரம்பரியம்

67 நந்தி அருள்பெற்ற நாதரை நாடின்
நந்திகள் நால்வர் சிவயோக மாமுனி
மன்று தொழுத பதஞ்சலி வியாக்ரமர்
என்றிவர் என்னோ டெண்மரு மாமே. க

68 நந்தி அருளாலே நாதனும் பேர்பெற்றோம்
நந்தி அருளாலே மூலனை நாடினோம்
நந்தி அருளாவ தென்செயும் நாட்டினில்
நந்தி வழிகாட்ட நானிருந் தேனே. உ

69 மந்திரம் பெற்ற வழிமுறை மாலாங்கன்
இந்திரன் சோமன் பிரமன் உருத்திரன்
கந்துருக் காலாங்கி கஞ்ச மலையனோ
டிந்த எழுவரும் என்வழி யாமே. ங

70 நால்வரும் நாலு திசைக்கொன்று நாதர்கள்
நால்வரும் நானு விதப்பொருள் கைக்கொண்டு
நால்வரும் நான்பெற்ற தெல்லாம் பெறுகென
நால்வருந் தேவராய் நாதரா னார்களே. ௪

71 மொழிந்தது மூவர்க்கும் நால்வர்க்கும் ஈசன்
ஒழிந்த பெருமை இறப்பும் பிறப்புஞ்
செழுஞ்சுடர் மூன்றொளி யாகிய தேவன்
கழிந்த பெருமையைக் காட்டகி லானே. ௫

72 எழுந்துநீர் பெய்யினும் எட்டுத் திசையுஞ்
செழுந்தண் நியமங்கள் செய்மினென் றண்ணல்
கொழுந்தண் பவளக் குளிர்சடை யோடே
அழுந்திய நால்வர்க் கருள்புரிந் தானே. ௬

## 5. திருமூலர் வரலாறு

73 நந்தி இணையடி நான்தலை மேற்கொண்டு
புந்தியின் உள்ளே புகப்பெய்து போற்றிசெய்
தந்தி மதிபுனை அரனடி நாள்தொறுஞ்
சிந்தைசெய் தாகமஞ் செப்பலுற் றேனே. ௧

74 செப்புஞ் சிவாகமம் என்னும்அப் பேர்பெற்றும்
அப்படி நல்கும் அருள்நந்தி தாள்பெற்றுத்
தப்பிலா மன்றில் தனிக்கூத்துக் கண்டபின்
ஒப்பில் எழுகோடி யுகம்இருந் தேனே. ௨

75 இருந்தவக் காரணங் கேளிந் திரனே
பொருந்திய செல்வப் புவனா பதியாம்
அருந்தவச் செல்வியைச் சேவித் தடியேன்
பரிந்துடன் வந்தனன் பத்தியி னாலே. ௩

76 சதாசிவந் தத்துவம் முத்தமிழ் வேதம்
மிதாசனி யாதிருந் தேனின்ற காலம்
இதாசனி யாதிருந் தேன்மனம் நீங்கி
உதாசனி யாதுட னேஉணர்ந் தோமால். ௪

77 மாலாங்க னேயிங்கு யான்வந்த காரணம்
நீலாங்க மேனியள் நேரிழை யாளொடு
மூலாங்க மாக மொழிந்த திருக்கூத்தின்
சீலாங்க வேதத்தைச் செப்பவந் தேனே. ரு

78 நேரிழை யாவாள் நிரதிச யானந்தப்
பேருடை யாளென் பிறப்பறுத் தாண்டவள்
சீருடை யாள்சிவ னாவடு தண்டுறை
சீருடை யாள்பதஞ் சேர்ந்திருந் தேனே. சா

79 சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனைச்
சேர்ந்திருந் தேன்சிவ னாவடு தண்டுறை
சேர்ந்திருந் தேன்சிவ போதியின் நீழலிற்
சேர்ந்திருந் தேன்சிவன் நாமங்கள் ஓதியே. எ

80 இருந்தேன்இக் காயத்தே எண்ணிலி கோடி
இருந்தேன் இராப்பகல் அற்ற இடத்தே
இருந்தேன் இமையவர் ஏத்தும் பதத்தே
இருந்தேன் என்நந்தி இணையடிக் கீழே. அ

81 பின்னைநின் றென்னே பிறவி பெறுவது
முன்னைநன் றாக முயல்தவஞ் செய்கிலர்
என்னைநன் றாக இறைவன் படைத்தனன்
தன்னைநன் றாகத் தமிழ்ச்செய்யு மாறே. கூ

82 ஞானத் தலைவிதன் நந்தி நகர்புக்கு
ஊனமில் ஒன்பது கோடி யுகந்தனுள்
ஞானப்பா லாட்டி நாதனை அர்ச்சித்து
நானும் இருந்தேன்நற் போதியின் கீழே. கO

83 செல்கின்ற வாறறி சிவமுனி சித்தசன்
வெல்கின்ற ஞானத்து மிக்கோர் முனிவராய்ப்
பல்கின்ற தேவர் அசுரர் நரர்தம்பால்
ஒல்கின்ற வான்வழி யூடுவந் தேனே. கக

77 மாலாங்க னேயிங்கு யான்வந்த காரணம்
நீலாங்க மேனியள் நேரிழை யாளொடு
மூலாங்க மாக மொழிந்த திருக்கூத்தின்
சீலாங்க வேதத்தைச் செப்பவந் தேனே. ரு

78 நேரிழை யாவாள் நிரதிச யானந்தப்
பேருடை யாளென் பிறப்பறுத் தாண்டவள்
சீருடை யாள்சிவ னாவடு தண்டுறை
சீருடை யாள்பதஞ் சேர்ந்திருந் தேனே. சா

79 சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனைச்
சேர்ந்திருந் தேன்சிவ னாவடு தண்டுறை
சேர்ந்திருந் தேன்சிவ போதியின் நீழலிற்
சேர்ந்திருந் தேன்சிவன் நாமங்கள் ஓதியே. எ

80 இருந்தேன்இக் காயத்தே எண்ணிலி கோடி
இருந்தேன் இராப்பகல் அற்ற இடத்தே
இருந்தேன் இமையவர் ஏத்தும் பதத்தே
இருந்தேன் என்நந்தி இணையடிக் கீழே. அ

81 பின்னைநின் றென்னே பிறவி பெறுவது
முன்னைநன் றாக முயல்தவஞ் செய்கிலர்
என்னைநன் றாக இறைவன் படைத்தனன்
தன்னைநன் றாகத் தமிழ்ச்செய்யு மாறே. கூ

82 ஞானத் தலைவிதன் நந்தி நகர்புக்கு
ஊனமில் ஒன்பது கோடி யுகந்தனுள்
ஞானப்பா லாட்டி நாதனை அர்ச்சித்து
நானும் இருந்தேன்நற் போதியின் கீழே. க0

83 செல்கின்ற வாறறி சிவமுனி சித்தசன்
வெல்கின்ற ஞானத்து மிக்கோர் முனிவராய்ப்
பல்கின்ற தேவர் அசுரர் நரர்தம்பால்
ஒல்கின்ற வான்வழி யூடுவந் தேனே. கக

91 விளக்கிப் பரமாகும் மெய்ஞ்ஞானச் சோதி
அளப்பில் பெருமையன் ஆனந்த நந்தி
துளக்கறும் ஆனந்தக் கூத்தன்சொற் போந்து
வளப்பில் கயிலை வழியில்வந் தேனே. கக

92 நந்தி அருளாலே மூலனை நாடிப்பின்
நந்தி அருளாலே சதாசிவ னாயினேன்
நந்தி அருளால்மெய்ஞ் ஞானத்துள் நண்ணினேன்
நந்தி அருளாலே நானிருந் தேனே. உ0

93 இருக்கில் இருக்கும் எண்ணிலி கோடி
அருக்கின்ற மூலத்துள் அங்கே இருக்கும்
அருக்கனுஞ் சோமனும் ஆரழல் வீச
உருக்கிய ரோமம் ஒளிவிடுந் தானே. உக

94 பிதற்றுகின் றேன்என்றும் பேர்நந்தி தன்னை
இயற்றுவன் நெஞ்சத் திரவும் பகலும்
முயற்றுவன் ஓங்கொளி வண்ணன்எம் மானை
இயற்றிகழ் சோதி இறைவனு மாமே. உஉ

## 6. அவையடக்கம்

95 ஆரறி வார்எங்கள் அண்ணல் பெருமையை
யாரறி வார்இந்த அகலமும் நீளமும்
பேரறி யாத பெருஞ்சுடர் ஒன்றதின்
வேரறி யாமை விளம்புகின் றேனே. க

96 பாடவல் லார்நெறி பாட அறிகிலேன்
ஆடவல் லார்நெறி ஆட அறிகிலேன்
நாடவல் லார்நெறி நாட அறிகிலேன்
தேடவல் லார்நெறி தேடகில் லேனே. உ

97 மன்னிய வாய்மொழி யாலும் மதித்தவர்
இன்னிசை உள்ளே எழுகின்ற ஈசனைப்
பின்னை உலகம் படைத்த பிரமனும்
உன்னும் அவனை உணரலு மாமே. ௩

98 தத்துவ ஞானம் உரைத்தது தாழ்வரை
முத்திக் கிருந்த முனிவருந் தேவரும்
ஒத்துடன் வேறு யிருந்து துதிசெயும்
பத்திமை யால்இப் பயனறி யாரே. ச

## 7. திருமந்திரத் தொகைச்சிறப்பு

99 மூலன் உரைசெய்த மூவா யிரந்தமிழ்
ஞாலம் அறியவே நந்தி அருளது
காலை எழுந்து கருத்தறிந் தோதிடின்
ஞாலத் தலைவனை நண்ணுவ ரன்றே. க

100 வைத்த பரிசே வகைவகை நன்னூலின்
முத்தி முடிவிது மூவா யிரத்திலே
புத்திசெய் பூர்வத்து மூவா யிரம்பொது
வைத்த சிறப்புத் தருமிவை தானே. உ

## 8. குருமட வரலாறு

101 வந்த மடமேழு மன்னுஞ்சன் மார்க்கத்தின்
முந்தி உதிக்கின்ற மூலன் மடவரை
தந்திரம் ஒன்பது சார்வுமூ வாயிரஞ்
சுந்தர ஆகமச் சொல்மொழிந் தானே. க

102 கலந்தருள் காலாங்கர் தம்பால கோரர்
நலந்தரு மாளிகைத் தேவர்நா தாந்தர்
புலங்கொள் பரமானந் தர்போக தேவர்
நிலந்திகழ் மூலர் நிராமயத் தோரே. உ

## 9. திரிமூர்த்திகளின் சேட்ட கனிட்ட முறைமை

103 அளவில் இளமையும் அந்தமும் ஈறும்
அளவியல் காலமும் நாலும் உணரில்
தளர்விலன் சங்கரன் தன்னடி யார்சொல்
அளவில் பெருமை அரிஅயற் காமே. க

104 ஆதிப் பிரானும் அணிமணி வண்ணனும்
ஆதிக் கமலத் தலர்மிசை யானுஞ்
சோதிக்கில் மூன்றுந் தொடர்ச்சியில் ஒன்றெனர்
பேதித் துலகம் பிணங்குகின் றூர்களே. உ

105 ஈசன் இருக்கும் இருவினைக் கப்புறம்
பீசம் உலகிற் பெருந்தெய்வ மானது
ஈசன் அதுஇது என்பார் நினைப்பிலார்
தூசு பிடித்தவர் தூரறிந் தார்களே. ௩

106 சிவன்முதல் மூவரோ டைவர் சிறந்த
அவைமுதல் ஆறிரண் டொன்றொடொன் றூகும்
அவைமுதல் விந்துவும் நாதமும் ஓங்கச்
சவைமுதற் சங்கரன் தன்பெயர் தானே. ௪

107 பயன்அறிந் தவ்வழி எண்ணும் அளவில்
அயனொடு மால்நமக் கன்னியம் இல்லை
நயனங்கள் மூன்றுடை நந்தி தமராம்
வயனம் பெறுவீர்அவ் வானவ ராலே. ௫

108 ஓலக்கஞ் சூழ்ந்த உலப்பிலி தேவர்கள
பாலொத்த மேனி பணிந்தடி யேன்தொழ
மாலுக்கும் ஆதிப் பிரமற்கும் ஒப்புநீ
ஞாலத்து நம்மடி நல்கிடென் றூனே.

109 வானவர் என்றும் மனிதர்இவர் என்றுந்
தேனமர் கொன்றைச் சிவனருள் அல்லது
தானமர்ந் தோருந் தனித்தெய்வம் மற்றில்லை
ஊனமர்ந் தோரை உணர்வது தானே. ௭

110 சோதித்த பேரொளி மூன்றைந் தெனநின்ற
ஆதிக்கண் ஆவ தறிகிலர் ஆதர்கள்
நீதிக்கண் ஈசன் நெடுமால் அயன்என்று
பேதித் தவரைப் பிதற்றுகின் றூரே. அ

111 பரத்திலே ஒன்றாய்உள் ளாய்ப் புறமாகி
வரத்தினுள் மாயவ னாய்அய னாகித்
தரத்தினுள் தான்பல தன்மைய னாகிக்
கரத்தினுள் நின்று கழிவுசெய் தானே. ௯

112 *தானொரு கூறு சதாசிவன் எம்இறை
வானொரு கூறு மருவியும் அங்குளான்
கோனொரு கூறுடல் உள்நின் றுயிர்க்கின்ற
தானொரு கூறு சலமய னாமே. ௧௦

பாயிரம் முற்றிற்று

* திரு. மா. வே. விசுவநாத பிள்ளையவர்கள் பதிப்பில் 51—112 வரையுள்ள பாடல்கள் முறை மாறிக் காணப்படுகின்றன. இப் பதிப்பில் 51—94, 95—98, 99, 100, 101, 102, 103—112 என்பன அப்பதிப்பில் முறையே 61—104, 109—112, 107, 108, 105, 106, 51—60 ஆக உள்ளன.

# முதல் தந்திரம்

## 10. உபதேசம்

113 விண்ணின் றிழிந்து வினைக்கீடாய் மெய்கொண்டு
தண்ணின்ற தாளைத் தலைக்காவல் முன்வைத்து
உண்ணின் றுருக்கியொ ரொப்பிலா ஆனந்தக்
கண்ணின்று காட்டிக் களிம்பறுத் தானே. க

114 களிம்பறுத் தான்எங்கள் கண்ணுதல் நந்தி
களிம்பறுத் தான்அருட் கண்விழிப் பித்துக்
களிம்பணு காத கதிரொளி காட்டிப்
பளிங்கிற் பவளம் பதித்தான் பதியே. உ

115 பதிபசு பாசம் எனப்பகர் மூன்றிற்
பதியினைப் போற்பசு பாசம் அனாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கிற்பசு பாசம் நிலாவே. ங

116 வேயின் எழுங்கனல் போலேஇம் மெய்யெனுங்
கோயி லிருந்து குடிகொண்ட கோன்நந்தி
தாயினும் மும்மலம் மாற்றித் தயாஎன்னுந்
தோயம தாய்எழுஞ் சூரிய னாமே. ச

117 சூரிய காந்தமுஞ் சூழ்பஞ்சும் போலவே
சூரிய காந்தஞ் சூழ்பஞ்சைச் சுட்டிடா
சூரியன் சந்நிதி யிற்சுடு மாறுபோல்
ஆரியன் தோற்றமுன் அற்ற மலங்களே. ரு

118 மலங்களைந் தாமென மாற்றி அருளித்
தலங்களைந் தானற் சதாசிவ மான
புலங்களைந் தானப் பொதுவினுள் நந்தி
நலங்களைந் தானுள் நயந்தான் அறிந்தே. சா

119 அறிவைம் புலனுட னேநான் றதாகி
நெறியறி யாதுற்ற நீராழம் போல
அறிவறி வுள்ளே அழிந்தது போல
குறியறி விப்பான் குருபர னாமே. எ

120 ஆமேவு பால்நீர் பிரிக்கின்ற அன்னம்போல்
தாமே தனிமன்றில் தன்னந் தனிநித்தந்
தீமேவு பல்கர ணங்களுள் உற்றன
தாமேழ் பிறப்பெரி சார்ந்தவித் தாமே. அ

121 வித்தைக் கெடுத்து வியாக்கிரத் தேமிகச்
சுத்தத் துரியம் பிறந்து துடக்கற
ஒத்துப் புலனுயிர் ஒன்றாய் உடம்போடு
செத்திட் டிருப்பர் சிவயோகி யார்களே. கூ

122 சிவயோக மாவது சித்தசித் தென்று
தவயோகத் துள்புக்குத் தன்னொளி தானாய்
அவயோகஞ் சாரா தவன்பதி போக
நவயோக நந்தி நமக்களித் தானே. க௦

123 அளித்தான் உலகெங்குந் தானான உண்மை
அளித்தான் அமரர் அறியா உலகம்
அளித்தான் திருமன்றுள் ஆடுந் திருத்தாள்
அளித்தான் பேரின்பத் தருள்வெளி தானே. கக

124 வெளியில் வெளிபோய் விரவிய வாறும்
அளியில் அளிபோய் அடங்கிய வாறும்
ஒளியில் ஒளிபோய் ஒடுங்கிய வாறுந்
தெளியும் அவரே சிவசித்தர் தாமே. க௨

125 சித்தர் சிவலோகம் இங்கே தெரிசித்தோர்
சத்தமுஞ் சத்த முடிவுந்தம் முள்கொண்டோர்
நித்தர் நிமலர் நிராமயர் நீள்பர
முத்தர்தம் முத்தி முதல்முப்பத் தாறே. கந

126 முப்பதும் ஆறும் படிமுத்தி ஏணியாய்
ஒப்பிலா ஆனந்தத் துள்ளொளி புக்குச்

செப்ப அரிய சிவங்கண்டு தான்தெளிந்
தப்பரி சாக அமர்ந்திருந் தாரே. கச

127 இருந்தார் சிவமாகி எங்குந் தாமாகி
இருந்தார் சிவன்செயல் யாவையும் நோக்கி
இருந்தார் முக்காலத் தியல்பைக் குறித்தங்
கிருந்தார் இழவுவந் தெய்திய சோம்பே. கரு

128 சோம்பர் இருப்பது சுத்த வெளியிலே
சோம்பர் கிடப்பதுஞ் சுத்த வெளியிலே
சோம்பர் உணர்வு சுருதி முடிந்திடஞ்
சோம்பர்கண் டாரச் சுருதிக்கண் தூக்கமே. கசு

129 தூங்கிக்கண் டார்சிவ லோகமுந் தம்உள்ளே
தூங்கிக்கண் டார்சிவ யோகமுந் தம்உள்ளே
தூங்கிக்கண் டார்சிவ போகமுந் தம்உள்ளே
தூங்கிக் கண்டார்நிலை சொல்வதெவ் வாறே. கஎ

130 எவ்வாறு காண்பான் அறிவு தனக்கெல்லை
அவ்வா றருட்செய்வன் ஆதி பரன்தானும்
ஒவ்வாத மன்றுள் உமைகாண ஆடிடுஞ்
செவ்வானிற் செய்ய செழுஞ்சுடர் மாணிக்கம். கஅ

131 மாணிக்கத் துள்ளே மரகதச் சோதியாய்
மாணிக்கத் துள்ளே மரகத மாடமாய்
ஆணிப்பொன் மன்றினில் ஆடுந் திருக்கூத்தைப்
பேணித் தொழுதென்ன பேறுபெற் றாரே. ககூ

132 பெற்றார் உலகிற் பிரியாப் பெருநெறி
பெற்றார் உலகிற் பிறவாப் பெரும்பயன்
பெற்றார்அம் மன்றிற் பிரியாப் பெரும்பேறு
பெற்றார் உலகுடன் பேசாப் பெருமையே. உ0

133 பெருமை சிறுமை அறிந்தெம் பிரான்போல்
அருமை எளிமை அறிந்தறி வாரார்
ஒருமையுள் ஆமைபோல் உள்ளைந் தடக்கி
இருமையுங் கேட்டிருந் தார்புரை அற்றே. உக

134 புரைஅற்ற பாலினுள் நெய்கலந் தாற்போல்
திரைஅற்ற சிந்தைநல் ஆரியன் செப்பும்
உரையற் றுணர்வோர் உடம்பிங் கொழிந்தாற்
கரையற்ற சோதி கலந்தசத் தாமே. உஉ

135 சத்த முதல்ஐந்துந் தன்வழித் தான்சாரில்
சித்துக்குச் சித்தன்றிச் சேர்விடம் வேறுண்டோ
சுத்த வெளியிற் சுடரிற் சுடர்சேரும்
அத்தம் இதுகுறித் தாண்டுகொள் அப்பிலே. உங

136 அப்பினிற் கூர்மை ஆதித்தன் வெம்மையால்
உப்பெனப் பேர்பெற் றுருச்செய்த அவ்வுரு
அப்பினிற் கூடிய தொன்றாகு மாறுபோற்
செப்பினிற் சீவன் சிவத்துள் அடங்குமே. உச

137 அடங்குபே ரண்டத் தணுஅண்டஞ் சென்றங்
கிடங்கொண்ட தில்லை இதுவன்றி வேறுண்டோ
கடந்தொறும் நின்ற உயிர்கரை காணில்
திடம்பெற நின்றான் திருவடி தானே. உரு

138 திருவடி யேசிவ மாவது தேரில்
திருவடி யேசிவ லோகஞ் சிந்திக்கில்
திருவடி யேசெல் கதியது செப்பில்
திருவடி யேதஞ்சம் உள்தெளி வார்க்கே. உசா

139 தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமஞ் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே. உஎ

140 தானே புலன்ஐந்துந் தன்வச மாயிடுந்
தானே புலன்ஐந்துந் தன்வசம் போயிடுந்
தானே புலன்ஐந்துந் தன்னில் மடைமாறும்
தானே தனித்தெம் பிரான்தனைச் சந்தித்தே. உஅ

141 சந்திப் பதுநந்தி தன்திருத் தாளிணை
சிந்திப் பதுநந்தி செய்ய திருமேனி
வந்திப் பதுநந்தி நாமம்என் வாய்மையாற்
புந்திக்குள் நிற்பது நந்திபொற் போதமே. உ௯

142 போதந் தரும்எங்கள் புண்ணிய நந்தியைப்
போதந் தனில்வைத்துப் புண்ணிய ராயினோர்
நாதன் நடத்தால் நயனங் களிகூர
வேதந் துதித்திடப் போயடைந்தார் விண்ணே. ௩௰

## 11. யாக்கை நிலையாமை

143 மண்ணொன்று கண்டீர் இருவகைப் பாத்திரந்
திண்ணென் றிருந்தது தீவினை சேர்ந்தது
விண்ணின்று நீர்விழின் மீண்டுமண் ணானாற்போல்
எண்ணின்றி மாந்தர் இறக்கின்ற வாறே. ௧

144 பண்டம்பெய் கூரை பழகி விழுந்தக்கால்
உண்டஅப் பெண்டிரும் மக்களும் பின்செலார்
கொண்ட விரதமும் ஞானமும் அல்லது
மண்டி அவருடன் வழிநட வாதே. ௨

145 ஊரெலாங் கூடி ஒலிக்க அழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்
சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே. ௩

146 காலும் இரண்டு முகட்டலக் கொன்றுள
பாலுள் பருங்கழி முப்பத் திரண்டுள
மேலுள கூரை பிரியும் பிரிந்தால்முன்
போலுயிர் மீளப் புகஅறி யாதே. ௪

147 சீக்கை விளைந்தது செய்வினை மூட்டிற்ற
ஆக்கை பிரிந்த தலகு பழுத்தது
மூக்கினிற் கைவைத்து மூடிட்டுக் கொண்டுபோய்க்
காக்கைக் குப்பலி காட்டிய வாறே. ௫

## 11. யாக்கை நிலையாமை

148 அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
மடக்கொடி யாரொடு மந்தணங் கொண்டார்
இடப்பக்க மேஇறை நொந்தது என்றார்
கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந் தாரே. ௬

149 மன்றத்தே நம்பி மாடம் எடுத்தது
மன்றத்தே நம்பி சிவிகைபெற் றேறினன்
மன்றத்தே நம்பி முக்கோடி வழங்கினன்
சென்றத்தா வென்னத் திரிந்திலன் தானே. ௭

150 வாசந்தி பேசி மணம்புணர்ந் தப்பதி
நேசந் தெவிட்டி நினைப்பொழி வார்பின்னை
ஆசந்தி மேல்வைத் தமைய அழுதிட்டுப்
பாசந்தீச் சுட்டுப் பலியட்டி னார்களே. ௮

151 கைவிட்டு நாடிக் கருத்தழிந் தச்சற
நெய்யட்டிச் சோறுண்ணும் ஐவரும் போயினர்
மையிட்ட கண்ணாளும் மாடும் இருக்கவே
மெய்விட்டுப் போக விடைகொள்ளு மாறே. ௯

152 பந்தல் பிரிந்தது பண்டாரங் கட்டற்ற
ஒன்பது வாசலும் ஒக்க அடைந்தன
துன்புறு காலந் துரிசுவர மேன்மேல்
அன்புடை யார்கள் அழுதகன் றார்களே. ௧௦

153 நாட்டுக்கு நாயகன் நம்மூர்த் தலைமகன்
காட்டுச் சிவிகையொன் றேறிக் கடைமுறை
நாட்டார்கள் பின்செல்ல முன்னே பறைகொட்ட
நாட்டுக்கு நம்பி நடக்கின்ற வாறே. ௧௧

154 முப்பதும் முப்பதும் முப்பத் தறுவருஞ்
செப்ப மதிளுடைக் கோயிலுள் வாழ்பவர்
செப்ப மதிளுடைக் கோயில் சிதைந்தபின்
ஒப்ப அனைவரும் ஓட்டெடுத் தார்களே. ௧௨

155 மதுவூர் குழலியும் மாடும் மனையும்
இதுவூர் ஒழிய இதணம தேறிப்

திருவருட் சத்திக்குள் சித்தனு னந்தன்
அருளுரு வாகநின் ருடலுற் ருனே. ௬௯

2791 சிவமாடச் சத்தியும் ஆடச் சகத்தில்
அவமாட ஆடாத அம்பரம் ஆட
நவமான தத்துவ நாதாந்த மாடச்
சிவமாடும் வேதாந்தச் சித்தாந்தத் துள்ளே. ௭0

2792 நாதத்தின் அந்தமும் நாற்போத அந்தமும்
வேதத்தின் அந்தமும் மெய்ச்சிவா னந்தமுந்
தாதற்ற நல்ல சதாசிவா னந்தத்து
நாதப் பிரமஞ் சிவநட மாமே. ௭௧

2793 சிவமாதி ஐவர்திண் டாட்டமுந் தீரத்
தவமார் பசுபாசம் ஆங்கே தனித்துத்
தவமாம் பரனெங்குந் தானாக ஆடுந்
தவமாஞ் சிவானந்தத் தோர்ஞானக் கூத்தே. ௭௨

2794 கூடிநின் ருெரு காலத்துத் தேவர்கள்
வீடநின் ருன்விகிர் தாவென்னு நாமத்தைத்
தேடநின் ருன்திக ழுஞ்சுடர் மூன்ருெளி
ஆடநின் ருன்என்னை ஆட்கொண்ட வாறே. ௭௩

2795 நாதத் துவங்கடந் தாதி மறைநம்பி
பூதத் துவத்தே பொலிந்தின்பம் எய்தினர்
நேதத் துவமும் அவற்ருெடு நேதியும்
பேதப் படாவண்ணம் பின்னிநின் ருனே. ௭௪

2796 ஆனந்தம் ஆனந்தம் என்பர் அறிவிலர்
ஆனந்த மாநட மாரும் அறிகிலர்
ஆனந்த மாநட மாரும் அறிந்தபின்
தானந்தம் அற்றிடம் ஆனந்த மாமே. ௭௫

2797 திருந்துநற் சியென் றுதறிய கையும்
அருந்தவர் வாவென் றணைத்த மலர்க்கையும்
பொருந்தில் இமைப்பிலி யவ்வென்ற பொற்கையுந்
திருந்தத்தீ யாகுந் திருநிலை மவ்வே. ௭௬

2798 மருவுந் துடியுடன் மன்னிய வீச்சு
மருவிய அப்பும் அனலுடன் கையுங்
கருவின் மிதித்த கமலப் பதமும்
உருவில் சிவாய நமவென வோதே. எஎ

2799 அரன்துடி தோற்றம் அமைத்தல் திதியாம்
அரன்அங்கி தன்னில் அறையிற்சங் காரம்
அரனுற் றணைப்பில் அமருந் திரோதாயி
அரனடி யென்றும் அனுக்கிரகம் என்னே. எஅ

2800 தீத்திரட் சோதி திகழொளி யுள்ளொளி
கூத்தனைக் கண்டஅக் கோமளக் கண்ணினள்
மூர்த்திகள் மூவர் முதல்வ னிடைசெல்லப்
பார்த்தனள் வேதங்கள் பாடினள் தானே. எகூ

2801 நந்தியை எந்தையை ஞானத் தலைவனை
மந்திர மொன்றுள் மருவி யதுகடந்
தந்தர வானத்தின் அப்புறத் தப்பர
சுந்தரக் கூத்தனை என்சொல்லும் வாறே. அ௦

2802 சீய குருநந்தி திருஅம்ப லத்திலே
ஆயுறு மேனியை யாரும் அறிகிலர்
தீயுறு செம்மை வெளுப்பொடு மத்தன்மை
ஆயுறு மேனி அணைபுக லாமே. அக

2803 தானான சத்தியுந் தற்பரை யாய்நிற்குந்
தானும் பரற்கும் உயிர்க்குந் தகுமிச்சை
ஞானாதி பேத நடத்து நடித்தருள்
ஆனால் அரனடி நேயத்த தாமே. அஉ

## 219. ஆகாசப்பேறு

2804 உள்ள துளோமென ஈசன் ஒருவனை
உள்ளத் துளேயங்கி யாய வொருவனை
உள்ளத் துளேநீதி யாய வொருவனை
உள்ளத் துளேயுடல் ஆகாய மாமே. க

2805 பெருநில மாயண்ட மாயண்டத் தப்பால்
குருநில மாய்நின்ற கொள்கையன் ஈசன்
பெருநில மாய்நின்று தாங்கிய தாளோன்
அருநிலை யாய்நின்ற ஆதிப் பிரானே. உ

2806 அண்ட வொளியும் அகண்ட வொளியுடன்
பிண்ட வொளியாற் பிதற்றும் பெருமையை
உண்ட வெளிக்குள் ஒளிக்குள் ஒளித்தது
கொண்ட குறியைக் குலைத்தது தானே. ௩

2807 பயனுறு கன்னியர் போகத்தி னுள்ளே
பயனுறு மாதி பரஞ்சுடர்ச் சோதி
அயனொடு மாலறி யாவகை நின்றிட்
டுயர்நெறி யாயொளி யொன்றது வாமே. ௪

2808 அறிவுக் கறிவாம் அகண்ட வொளியும்
பிறியா வலத்தினிற் பேரொளி மூன்றும்
அறியா தடங்கிடில் அத்தன் அடிக்குட்
பிறியா திருக்கிற் பெருங்கால மாமே. ௫

2809 ஆகாச வண்ணன் அமரர் குலக்கொழுந்
தேகாச மாசுண மிட்டங் கிருந்தவன்
ஆகாச வண்ணம் அமர்ந்துநின் றப்புறம்
ஆகாச மாயங்கி வண்ணனு மாமே. ௬

2810 உயிர்க்கின்ற வாறும் உலகமும் ஒக்க
உயிர்க்கின்ற உள்ளொளி சேர்கின்ற போது
குயிற்கொண்ட பேதை குலாவி யுலாவி
வெயிற்கொண்டென் உள்ளம் வெளியது வாமே. ௭

2811 நணுகி லகல்கில னாதன் உலகத்
தணுகில் அகன்ற பெரும்பதி நந்தி
நணுகிய மின்னொளி சோதி வெளியைப்
பணியின் அமுதம் பருகலு மாமே. ௮

2812 புறத்துளா காசம் புவனம் உலகம்
அகத்துளா காசமெம் மாதி யறிவு
சிவத்துளா காசஞ் செழுஞ்சுடர்ச் சோதி
சகத்துளா காசந் தானஞ்ச மாதியே. ௬

## 220. ஞானோதயம்

2813 மனசந் தியிற்கண்ட மன்னனை வாகுங்
கனவுற ஆனந்தங் காண்டல் அதனை
வினவுற ஆனந்த மீதொழி வென்ப
இனமுற்று னந்தியா னந்த மிரண்டே ௧

2814 கரியட்ட கையன் கபாலங்கை ஏந்தி
எரியும் இளம்பிறை சூடும்எம் மானை
அரியன் பெரியனென் றட்டப்பட்ட தல்லால்
கரியன்கொல் சேயன்கொல் காண்கின்றி லேனே. ௨

2815 மிக்கா ரமுதுண்ண நஞ்சுண்ட மேலவன்
தக்கார் உரைத்த தவநெறி யேசென்று
புக்கா லருளும் பொன்னுரை ஞானத்தை
நக்கார் கழல்வழி நாடுமின் நீரே. ௩

2816 விளக்கைப் பிளந்து விளக்கினை யேற்றி
விளக்கினுக் குள்ளே விளக்கினைத் தூண்டி
விளக்கில் விளக்கை விளக்கவல் லார்க்கு
விளக்குடை யான்கழல் மேவலு மாமே. ௪

2817 தத்துவம் எங்குண்டு தத்துவன் அங்குண்டு
தத்துவம் எங்கில்லை தத்துவன் அங்கில்லை
தத்துவ ஞானத்தின் தன்மை யறிந்தபின்
தத்துவன் அங்கே தலைப்படுந் தானே. ௫

2818 விசும்பொன்று தாங்கிய மெய்ஞ்ஞானத் துள்ளே
அசும்பினின் றூறிய தாரமு தாகும்
பசும்பொன் திகழும் படர்சடை மீதே
குசும்ப மலர்க்கந்தங் கூடிநின் றானே. ௬

2819 முத்தின் வயிரத்தின் முந்நீர்ப் பவளத்தின்
கொத்தும் பசும்பொன்னின் தூவொளி மாணிக்க
மொத்துயர் அண்டத் துள்ளமர் சோதியை
எத்தன்மை வேறென்று கூறுசெய் வீரே. எ

2820 நானென்றுந் தானென்றும் நாடினேன் நாடலும்
நானென்றுந் தானென் றிரண்டில்லை யென்பது
நானென்ற ஞான முதல்வனே நல்கினன்
நானென்று நானும் நினைப்பொழிந் தேனே. அ

2821 ஞானத்தின் நன்னெறி நாதாந்த நன்னெறி
ஞானத்தின் நன்னெறி நானென் றறிவோர்தல்
ஞானத்தின் நல்யோக நன்னிலை யேநிற்றல்
ஞானத்தின் நன்மோன நாதாந்த வேதமே. கூ

2822 உய்யவல் லார்கட் குயிர்சிவ ஞானமே
உய்யவல் லார்கட் குயிர்சிவ தெய்வமே
உய்யவல் லார்கட் கொடுக்கம் பிரணவம்
உய்யவல் லாரறி வுள்ளறி வாமே. க0

2823 காணவல் லார்க்கவன் கண்ணின் மணியொக்குங்
காணவல் லார்க்குக் கடலின் அமுதொக்கும்
பேணவல் லார்க்குப் பிழைப்பிலன் பேர்நந்தி
ஆணவல் லார்க்கே யவன்துணை யாமே. கக

2824 ஓமெனும் ஓரெழுத் துள்நின்ற ஓசைபோல்
மேனின்ற தேவர் விரும்பும் விழுப்பொருள்
சேய்நின்ற செஞ்சுடர் எம்பெரு மானடி
ஆய்நின்ற தேவர் அகம்படி யாமே. க உ

## 221. சத்திய ஞானானந்தம்

2825 எப்பாழும் பாழும் மியாவுமாய் அன்றாகி
முப்பாழும் கீழுள முப்பாழும் முன்னியே
இப்பாழும் இன்னவா றென்பதி லாவின்பத்
தற்பர ஞானானந்தந் தானது வாகுமே. க

2826 தொம்பதந் தற்பதஞ் சொன்ன துரியம்போல்
நம்பிய மூன்றுந் துரியத்து நன்றாகும்
அம்புவி யுன்னு அதிசூக்க மப்பாலைச்
செம்பொரு ளாண்டருள் சீர்நந்தி தானே. ௨

2827 மன்னுஞ் சத்தியாதி மணியொளி மாசோபை
அன்னதோ டொப்ப மிடலொன்று மாறது
இன்னிய வுற்பலம் ஒண்சீர் நிறமணம்
பன்னிய சோபை பகராறு மானதே. ௩

2828 சத்தி சிவன்பர ஞானமுஞ் சாற்றுங்கால்
உய்த்த அனந்தஞ் சிவமுயர் ஆனந்தம்
வைத்த சொருபத்த சத்தி வருகுரு
உய்த்த வுடலிவை யுற்பலம் போலுமே. ௪

2829 உருவுற் பலநிறம் ஒண்மணஞ் சோபை
தரநிற்ப போலுயிர் தற்பரந் தன்னின்
மருவச் சிவமென்ற மாமுப் பதத்தின்
சொருபத்தன் சத்தியாதி தோன்றநின் றானே. ௫

2830 நினையும் அளவின் நெகிழ வணங்கிப்
புனையில் அவனைப் பொதியலு மாகும்
எனையுமெங் கோன்நந்தி தன்னருள் கூட்டி
நினையும் அளவில் நினைப்பித் தனனே. ௬

2831 பாலொடு தேனும் பழத்துள் இரதமும்
வாலிய பேரமு தாகும் மதுரமும்
போலுந் துரியம் பொடிபட வுள்புகச்
சீல மயிர்க்கால் தொறுந்தேக் கிடுமே. ௭

2832 அமரத் துவங்கடந் தண்டங் கடந்து
தமரத்து நின்ற தனிமையன் ஈசன்
பவளத்து முத்தும் பணிமொழி மாதர்
துவளற்ற சோதி தொடர்ந்துநின் றானே. ௮

2833 மத்திமம் ஆறாறு மாற்றி மலநீக்கிச்
சுத்தம தாகுந் துரியத் துரிசற்றுப்
பெத்த மறச்சிவ மாகிப் பிறழ்வுற்றுச்
சத்திய ஞானானந்தஞ் சார்ந்தனன் ஞானியே. ௯

2834 சிவமா யவமான மும்மலந் தீரப்
பவமான முப்பாழைப் பற்றறப் பற்றத்
தவமான சத்திய ஞானனந் தத்தே
துவமார் துரியஞ் சொரூபம தாமே. ௧௦

## 222. சொரூப உதயம்

2835 பரம குரவன் பரமெங்கு மாகித்
திரமுற எங்கணுஞ் சேர்ந்தொழி வற்று
நிரவு சொரூபத்துள் நீடுஞ் சொரூபம்
அரிய துரியத் தணைந்துநின் றானே. ௧

2836 குலைக்கின்ற நீரிற் குவலய நீரும்
அலைக்கின்ற காற்றும் அனலொடா காச
நிலத்திடை வானிடை நீண்டகன் றானை
வரைத்து வலஞ்செயு மாறறி யேனே. ௨

2837 அங்குநின் றானயன் மால்முதல் தேவர்கள்
எங்குநின் றாரும் இறைவனென் றேத்துவர்
தங்கிநின் றான்தனி நாயகன் எம்மிறை
பொங்கிநின் றான்புவ னாபதி தானே. ௩

2838 சமையச் சுவடுந் தனையறி யாமற்
கமையற்ற காமாதி காரணம் எட்டுந்
திமிரச் செயலுந் தெளிவுடன் நின்றோர்
அமரர்க் கதிபதி யாகிநிற் பாரே. ௪

2839 மூவகைத் தெய்வத் தொருவன் முதலுரு
வாயது வேறா மதுபோல் அணுப்பரன்
சேய சிவமுத் துரியத்துச் சீர்பெற
ஏயும் நெறியென் றிறைநூல் இயம்புமே. ௫

2840 உருவன்றி யேநின் றுருவம் புணர்க்குங்
கருவன்றி யேநின்று தான்கரு வாகும்
அருவன்றி யேநின்ற மாயப் பிரானைக்
குருவன்றி யாவர்க்குங் கூடவொண் ணாதே. ௬

2841 உருவ நினைப்பவர்க் குள்ளூறுஞ் சோதி
உருவ நினைப்பவர் ஊழியுங் காண்பர்
உருவ நினைப்பவர் உம்பரு மாவர்
உருவ நினைப்பவர் உலகத்தில் யாரே. ௭

2842 பரஞ்சோதி யாகும் பதியினைப் பற்றுப்
பரஞ்சோதி என்னுட் படிந்ததற் பின்னைப்
பரஞ்சோதி யுண்ணான் படியப் படியப்
பரஞ்சோதி தன்னைப் பறையக்கண் டேனே. ௮

2843 சொரூபம் உருவங் குணங்தொல் விழுங்கி
அறியன வுற்பல மாமாறு போல
மருவிய சத்தியாதி நான்கு மதித்த
சொரூபக் குரவன் சுகோதயத் தானே. ௯

2844 உரையற்ற ஆனந்த மோன சொரூபத்தன்
கரையற்ற சத்தியாதி காணில் அகார
மருவுற் றுகார மகாரம தாக
உரையற்ற தாரத்தில் உள்ளொளி யாமே. ௧௦

2845 தலைநின்ற தாழ்வரை மீது தவஞ்செய்து
முலைநின்ற மாதறி மூர்த்தியை யானும்
புலைநின்ற பொல்லாப் பிறவி கடந்து
கலைநின்ற கள்வனிற் கண்டுகொண் டேனே. ௧௧

2846 ஆமா றறிந்தேன் அகத்தின் அரும்பொருள்
போமா றறிந்தேன் புகுமாறு மீதென்றே
ஏமாப்ப தில்லை இனியோ ரிடமில்லை
நாமா முதல்வனும் நானென லாமே. ௧௨

## 223. ஊழ்

2847 சேற்றிலென் சீவிலென் செஞ்சாந் தணியிலென்
மத்தகத் தேயுளி நாட்டி மறிக்கிலென்
வித்தகன் நந்தி விதிவழி யல்லது
தத்துவ ஞானிகள் தன்மைகுன் றாரே. க

2848 தான்முன்னஞ் செய்த விதிவழி தானல்லால்
வான்முன்னஞ் செய்தங்கு வைத்ததோர் மாட்டில்லை
கோன்முன்னஞ் சென்னி குறிவழி யேசென்று
நான் முன்னஞ் செய்ததே நன்னில மானதே. உ

2849 ஆறிட்ட நுண்மணல் ஆறே சுமவாதே
கூறிட்டுக் கொண்டு சுமந்தறி வாரில்லை
நீறிட்ட மேனி நிமிர்சடை நந்தியைப்
பேறிட்டென் னுள்ளம் பிரியகி லாவே. ௩

2850 வானின் றிடிக்கிலென் மாகடல் பொங்கிலென்
கானின்ற செந்தீக் கலந்துடன் வேகிலென்
தானொன்றி மாருதஞ் சண்டம் அடிக்கிலென்
நாடொன்றி நாதனை நாடுவன் நானே. ச

2851 ஆனை துரக்கிலென் அம்பூ டறுக்கிலென்
கானத் துழுவை கலந்து வளைக்கிலென்
ஏனைப் பதியினில் எம்பெரு மான்வைத்த
ஞானத் துழவினை நானுழு வேனே. ரு

2852 கூடு கெடின்மற் றோர் கூடுசெய் வானுளன்
நாடு கெடினும் நமர்கெடு வாரில்லை
வீடு கெடின்மற் றோர் வீடுபுக்கால் ஒக்கும்
பாடது நந்தி பரிசறி வார்க்கே. சு

## 224. சிவதரிசனம்

2853 சிந்தைய தென்னச் சிவனென்ன வேறில்லை
சிந்தையி னுள்ளே சிவனும் வெளிப்படுஞ்
சிந்தை தெளியத் தெளியவல் லார்கட்குச்
சிந்தையி னுள்ளே சிவனிருந் தானே. க

2854 வாக்கு மனமு மறைந்த மறைப்பொருள்
நோக்குமின் நோக்கப் படும்பொருள் நுண்ணிது
போக்கொன் றும் இல்லை வரவில்லை கேடில்லை
யாக்கமும் அத்தனை ஆய்ந்துகொள் வார்க்கே. உ

2855 பரனாய்ப் பராபர னாகியப் பாற்சென்
றுரனாய் வழக்கற வொண்சுடர் தானாய்த்
தரனாய்த் தனதென வாறறி வொண்ணா
அரனா யுலகில் அருள்புரிந் தானே. ௩

## 225. சிவசொரூப தரிசனம்

2856 ஓதும் மயிர்க்கால் தொறும்அமு தூறிய
பேதம் அபேதம் பிறழாத ஆனந்த
மாதி சொரூபங்கள் மூன்றகன் றப்பாலை
வேதம் ஓதுஞ் சொரூபிதன் மேன்மையே. க

2857 உணர்வும் அவனே உயிரும் அவனே
புணரும் அவனே புலவி யவனே
இணரும் அவன்தன்னை யெண்ண லு மாகான்
துணரின் மலர்க்கந்தந் துன்னிநின் றானே. உ

2858 துன்னிநின் றான்தன்னை யுன்னிமுன் னாவிரு
முன்னி யவர்தங் குறையை முடித்திடும்
மன்னிய கேள்வி மறையவன் மாதவன்
சென்னியுள் நின்றதோர் தேற்றத்த னாமே. ௩

2859 மின்னுற்ற சிந்தை விழித்தேன் விழித்தலுந்
தன்னுற்ற சோதி தலைவன் இணையிலி
பொன்னுற்ற மேனிப் புரிசடை நந்தியும்
என்னுற் றறிவனென் என்விழித் தானே. ௪

2860 சத்திய ஞானத் தனிப்பொருள் ஆனந்தஞ்
சித்தத்தி னில்லாச் சிவானந்தப் பேரொளி
சுத்தப் பிரம துரியந் துரியத்துள்
உய்த்த துரியத் துறுபே ரொளியே. ரு

2861 பரனல்ல நீடும் பராபர னல்ல
உரனல்ல மீதுணர் ஒண்சுட ரல்ல
தரனல்ல தானவை யாயல்ல வாகும்
அரனல்ல ஆனந்தத் தப்புறத் தானே. ௬

2862 முத்தியுஞ் சித்தியும் முற்றிய ஞானத்தோன்
பத்தியுள் நின்று பரந்தன்னுள் நின்றுமா
சத்தியுள் நின்றோர்க்குத் தத்துவங் கூடலாற்
சுத்தி யகன்றோர் சுகானந்த போதரே. ௭

2863 துரிய அதீதஞ் சொல்லறும் பாழாம்
அரிய துரியம் அதீதம் புரியில்
விரியுங் குவியும் விள்ளா மிளிருந்தன்
உருவுந் திரியும் உரைப்பதெவ் வாறே. ௮

## 226. முத்தி பேதம், கரும நிருவாணம்

2864 ஓதிய முத்தி யடைவே உயிர்பர
பேதமி லச்சிவம் எய்துந் துரியமோ
டாதி சொரூபஞ் சொரூபத்த தாகவே
ஏதமி லாநிரு வாணம் பிறந்ததே. ௧

2865 பற்றறப் றவர்பற்றி நின்ற பரம்பொருள்
கற்றறப் றவர்கற்றுக் கருதிய கண்ணுதல்
சுற்றறப் றவர்சுற்றி நின்றஎன் சோதியைப்
பெற்றுறப் றவர்கள் பிதற்றொழிந் தாரே. ௨

## 227. சூனிய சம்பாஷணை

2866 காயம் பலகை கவறைந்து கண்மூன்றாய்
ஆயம் பொருவதோர் ஐம்பத்தோ ரக்கரம்
ஏய பெருமா னிருந்து பொருகின்ற
மாயக் கவற்றின் மறைப்பறி யேனே. ௧

2867 தூறு படர்ந்து கிடந்தது தூநெறி
மாறிக் கிடக்கும் வகையறி வாரில்லை
மாறிக் கிடக்கும் வகையறி வாளர்க்கு
ஊறிக் கிடந்ததென் உள்ளன்பு தானே. ௨

2868 ஆறு தெருவில் அகப்பட்ட சந்தியிற்
சாறு படுவன நான்கு பனையுள
ஏறற் கரியதோர் ஏணியிட் டப்பனை
ஏறலுற் றேன்கடல் ஏழுங்கண் டேனே. ௩

2869 வழுதலை வித்திடப் பாகன் முளைத்தது
புழுதியைத் தோண்டினேன் பூசணி பூத்தது
தொழுதுகொண் டோடினர் தோட்டக் குடிகண்
முழுதும் பழுத்தது வாழைக் கனியே. ௪

2870 ஐயென்னும் வித்தினில் ஆனை விளைப்பதோர்
செய்யுண்டு செய்யின் தெளிவறி வாரில்லை
மையணி கண்டன் மனம்பெறின் அந்நிலம்
பொய்யொன்று மின்றிப் புகவெளி தாமே. ௫

2871 பள்ளச்செய் யொன்றுண்டு பாழ்ச்செய் இரண்டுள
கள்ளச்செய் யங்கே கலந்து கிடந்தது
உள்ளச்செய் யங்கே யுழவுசெய் வார்கட்கு
வெள்ளச்செய் யாகி விளைந்தது தானே. ௬

2872 மூவணை யேறு முழுவது முக்காணி
தாமணி கோலித் தறியுறப் பாய்ந்திடு
நாவணை கோலி நடுவிற் செறுவுழார்
காலணை கோலிக் களருழு வாரே. ௭

2873 ஏற்றம் இரண்டுள ஏழு துரவுள
மூத்தான் இறைக்க இளையான் படுத்தநீர்
பாத்தியிற் பாயாது பாழ்ப்பாய்ந்து போயிடிற்
கூத்தி வளர்த்ததோர் கோழிப்புள் ளாமே. ௮

2874 பட்டிப் பசுக்கள் இருபத்து நாலுள
குட்டிப் பசுக்களோ ரேழுள ஐந்துள
குட்டிப் பசுக்கள் குடப்பால் சொரியினும்
பட்டிப் பசுவே பனவற்கு வாய்த்ததே. ௯

2875 ஈற்றுப் பசுக்கள் இருபத்து நாலுள
ஊற்றுப் பசுக்கள் ஒருகுடம் பால்போதும்

காற்றுப் பசுக்கள் கறந்துண்ணுங் காலத்து
மாற்றுப் பசுக்கள் வரவறி யோமே. க0

2876 தட்டான் அகத்தில் தலையான மச்சின்மேல்
மொட்டா யெழுந்தது செம்பால் மலர்ந்தது
வட்டம் படவேண்டி வாய்மை மடித்திட்டுத்
தட்டான் அதனைத் தகைந்துகொண் டானே. கக

2877 அரிக்கின்ற நாற்றங்கால் அல்லற் கழனி
திரிக்கின்ற வொட்டஞ் சிக்கெனக் கட்டி
வரிக்கின்ற நல்லான் கறவையைப் பூட்டில்
விரிக்கின்ற வெள்ளரி வித்துவித் தாமே. கஉ

2878 இடாக்கொண்டு தூவி எருவிட்டு வித்திக்
கிடாக்கொண்டு பூட்டிக் கிளறி முளையை
மிடாக்கொண்டு சோறட்டு மெள்ள விழுங்கார்
இடாக்கொண்டு செந்நெல் அறுக்கின்ற வாறே. கங

2879 விளைந்து கிடந்தது மேலைக்கு வித்தது
விளைந்து கிடந்தது மேலைக்குக் காதம்
விளைந்து விளைந்து விளைந்துகொள் வார்க்கு
விளைந்து கிடந்தது மேவுமுக் காதமே. கச

2880 களருழு வார்கள் கருத்தை யறியோங்
களருழு வார்கள் கருதலு மில்லைக்
களருழு வார்கள் களரின் முளைத்த
வளரிள வஞ்சியின் மாய்தலு மாமே. கரு

2881 கூப்பிடு கொள்ளாக் குறுநரிக் கொட்டகத்
தாப்பிடு பாசத்தை யங்கியுள் வைத்திட்டு
நாட்பட நின்று நலம்புகுந் தாயிழை
ஏற்பட இல்லத் தினிதிருந் தானே. கசு

2882 மலைமேல் மழைபெய்ய மான்கன்று துள்ளக்
குலைமேல் இருந்த கொழுங்கனி வீழ
உலைமேல் இருந்த உறுப்பெனக் கொல்லன்
முலைமேல் அமிர்தம் பொழியவைத் தானே. கஎ

2883 பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு
மேய்ப்பாரும் இன்றி வெறித்துத் திரிவன
மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்கினாற்
பார்ப்பான் பசுஐந்தும் பாலாச் சொரியுமே. கஅ

2884 ஆமாக்கள் ஐந்தும் அரியேறு முப்பதுந்
தேமா இரண்டொடு திப்பிலி யொன்பதுந்
தாமாக் குரங்கொளிற் றம்மனத் துள்ளன
மூவாக் கடாவிடின் மூட்டுகின் றாரே. கக

2885 எழுதாத புத்தகத் தேட்டின் பொருளைத்
தெருளாத கன்னி தெளிந்திருந் தோத
மலராத பூவின் மணத்தின் மதுவைப்
பிறவாத வண்டு மணமுண்ட வாறே. உ0

2886 போகின்ற பொய்யும் புகுகின்ற பொய்வித்துங்
கூகின்ற நாவலின் கூழைத் தருங்கனி
ஆகின்ற பைங்கூழ் அவையுண்ணும் ஐவரும்
வேகின்ற கூரை விருத்திபெற் றாரே. உக

2887 மூங்கின் முளையில் எழுந்ததோர் வேம்புண்டு
வேம்பினிற் சார்ந்து கிடந்த பனையிலோர்
பாம்புண்டு பாம்பைத் துரத்தித்தின் பாரின்றி
வேம்பு கிடந்து வெடிக்கின்ற வாறே. உஉ

2888 பத்துப் பரும்புலி யானை பதினைந்து
வித்தகர் ஐவர் வினோதகர் ஈரெண்மர்
அத்தகு மூவர் அறுவர் மருத்துவர்
அத்தலை ஐவர் அமர்ந்துநின் றாரே. உங

2889 இரண்டு கடாவுண்டு இவ்வூரி னுள்ளே
இரண்டு கடாவுக்கும் ஒன்றே தொழும்பன்
இரண்டு கடாவும் இருத்திப் பிடிக்கில்
இரண்டு கடாவும் ஒருகடா வாமே. உச

2890 ஒத்த மனக்கொல்லை யுள்ளே சமன்கட்டிப்
பத்தி வலையிற் பருத்தி நிறுத்தலால்

முத்தக் கயிறாக மூவர்கள் ஊரினுள்
நித்தம் பொருது நிரம்பநின் றாரே. உரு

2891 கூகையும் பாம்புங் கிளியொடு பூனையும்
நாகையும் பூழும் நடுவில் உறைவன
நாகையைக் கூகை நணுக லுறுதலுங்
கூகையைக் கண்டெலி கூப்பிடு மாறே. உசு

2892 குலைக்கின்ற நன்னகை யாங்கொங் குழக்கின்
நிலைக்கின்ற வெள்ளெலி மூன்று கொணர்ந்தான்
உலைக்குப் புறமெனில் ஓடு மிருக்கும்
புலைக்குப் பிறந்தவை போகின்ற வாறே. உஎ

2893 காடுபுக் காரினிக் காணார் கடுவெளி
கூடுபுக் கானது ஐந்து குதிரையும்
மூடுபுக் கானது ஆறுள ஒட்டகம்
மூடு புகாவிடின் மூவணை யாமே. உஅ

2894 கூறையுஞ் சோறுங் குழாயகத் தெண்ணெயுங்
காறையும் நாணும் வளையலுங் கண்டவர்
பாறையி லுற்ற பறக்கின்ற சிலைபோல்
ஆறைக் குழியில் அழுந்துகின் றாரே. உகூ

2895 துருத்தியுள் ளக்கரை தோன்று மலைமேல்
விருத்திகண் காணிக்கப் போவார்முப் போதும்
வருத்தியுள் நின்ற மலையைத் தவிர்ப்பாள்
ஒருத்தியுள் ளாளவர் ஊரறி யோமே. ௩0

2896 பருந்துங் கிளியும் படுபறை கொட்டத்
திருந்திய மாதர் திருமணப் பட்டார்
பெருந்தவப் பூதம் பெறலுரு வாகும்
இருந்திய பேற்றினில் இன்புறு வாரே. ௩க

2897 கூடும் பறவை இரைகொத்தி மற்றத
னூடுபுக் குண்டி யறுக்குறில் என்னெக்குஞ்
சூடேறி நெய்யுண்டு மைகான் றிடுகின்ற
பாடறி வார்க்குப் பயனெளி தாமே. ௩உ

2898 இலையில்லை பூவுண் டினவண் டிங்கில்லை
தலையில்லை வேருண்டு தாளில்லை பூவின்
குலையில்லை கொய்யும் மலருண்டு சூடுந்
தலையில்லை தாழ்ந்த கிளைபுல ராதே. ௩௩.

2899 அக்கரை நின்றதோர் ஆல மரங்கண்டு
நக்கரை வாழ்த்தி நடுவே பயன்கொள்வர்
மிக்கவ ரஞ்சு துயரமுங் கண்டுபோய்த்
தக்கவர் தாழ்ந்து கிடக்கின்ற வாறே. ௩௪

2900 கூப்பிடு மாற்றிலே வன்கா டிருகாதங்
காப்பிடு கள்ளர் கலந்துநின் றுருளர்
காப்பிடு கள்ளரை வெள்ளர் தொடர்ந்திட்டுக்
கூப்பிடு மீண்டதோர் கூரைகொண் டாரே. ௩௫

2901 கொட்டியும் ஆம்பலும் பூத்த குளத்திடை
எட்டியும் வேம்பும் இனியதோர் வாழையுங்
கட்டியுந் தேனுங் கலந்துண்ண மாட்டாதார்
எட்டிப் பழத்துக் கிளைக்கின்ற வாறே. ௩௬

2902 பெடைவண்டும் ஆண்வண்டும் பீடிகை வண்ணக்
குடைகொண்ட பாசத்துக் கோலமுண் டானுங்
கடைவண்டு தானுண்ணுங் கண்கலந் திட்ட
பெடைவண்டு தான்பெற்ற தின்பமு மாமே. ௩௭

2903 கொல்லையில் மேயும் பசுக்களைச் செய்தவன்
எல்லை கடப்பித் திறையடிக் கூட்டியே
வல்லசெய் தாற்றன் மதித்தபி னல்லது
கொல்லைசெய் நெஞ்சங் குறியறி யாதே. ௩௮

2904 தட்டத்து நீரிலே தாமரை பூத்தது
குட்டத்து நீரிற் குவளை எழுந்தது
விட்டத்தி னுள்ளே விளங்கவல் லார்கட்குக்
குட்டத்தி லிட்டதோர் கொம்மட்டி யாமே. ௩௯

2905 ஆறு பறவைகள் ஐந்தகத் துள்ளன
நூறு பறவை நுனிக்கொம்பின் மேலன

ஏறும் பெரும்பதி ஏழுங் கடந்தபின்
மாறுத லின்றி மனைபுக லாமே. ௪0

2906 கொட்டனஞ் செய்து குளிக்கின்ற கூவலுள்
வட்டனப் பூமி மருவிவந் தூறிடுங்
கட்டனஞ் செய்து கயிற்றால் தொழுமியுள்
ஒட்டனஞ் செய்தொளி யாவர்க்கு மாமே. ௪௧

2907 ஏழு வளைகடல் எட்டுக் குலவரை
யாழும் விசும்பினில் அங்கி மழைவளி
தாழு மிருநிலந் தன்மை யதுகண்டு
வாழ நினைக்கில தாலய மாமே. ௪௨

2908 ஆலிங் கனஞ்செய் தகஞ்சுடச் சூலத்துச்
சாலிங் கமைத்துத் தலைமை தவிர்த்தனர்
கோலிங் கமைத்தபின் கூபப் பறவைகண்
மாலிங்கன் வைத்தது முன்பின் வழியே. ௪௩

2909 கொட்டுக்குந் தாலி இரண்டே இரண்டுக்குங்
கொட்டுக்குந் தாலிக்கும் பாரை வலிதென்பர்
கொட்டுக்குந் தாலிக்கும் பாரைக்கும் மூன்றுக்கும்
இட்டம் வலிதென்பர் ஈசன் அருளே. ௪௪

2910 கயலொன்று கண்டவர் கண்டே இருப்பர்
முயலொன்று கண்டவர் மூவரும் உய்வர்
பறையொன்று பூசல் பிடிப்பா ரொருவன்
மறையொன்று கண்ட துருவம்பொன் னாமே. ௪௫

2911 கோரை எழுந்து கிடந்த குளத்தினில்
ஆரை படர்ந்து தொடர்ந்து கிடந்தது
நாரை படுகின்றாற் போலல்ல நாதனார்
பாரை கிடக்கப் படிகின்ற வாறே. ௪௬

2912 கொல்லைமுக் காதமுங் காடரைக் காதமும்
எல்லை மயங்கிக் கிடந்த இருநெறி
எல்லை மயங்கா தியங்கவல் லார்கட்
கொல்லை கடந்துசென் றார்புக லாமே. ௪௭

2913 உழவொன்று வித்து வொருங்கின காலத்
தெழுமழை பெய்யா திருநிலச் செவ்வி
தழுவி வினைசென்று தான்பய வாது
வழுவாது போவன் வளர்சடை யோனே. ௪௮

2914 பதுங்கிலும் பாய்புலி பன்னிரு காதம்
ஒதுங்கிய தண்கடல் ஓதம் உலவ
மதுங்கிய வார்களி யாரமு தூறப்
பொதுங்கிய ஐவரைப் போய்வளைத் தானே. ௪௯

2915 தோணியொன் றேறித் தொடர்ந்து கடல்புக்கு
வாணிபஞ் செய்து வழங்கி வளர்மகன்
நீலிக் கிறையுமே நெஞ்சின் நிலைதளர்ந்
தாலிப் பழம்போல் அளிக்கின்ற அப்பே. ௫௦

2916 முக்காத மாற்றிலே மூன்றுள வாழைகள்
செக்குப் பழுத்த திரிமலங் காய்த்தன
பக்கனார் மிக்கார் படங்கினார் கன்னியர்
நக்கு மலருண்டு நடுவுநின் றாரே. ௫௧

2917 அடியும் முடியும் அமைந்ததோர் ஆத்தி
முடியும் நுனியின்கண் முத்தலை மூங்கில்
கொடியும் படையுங் கோட்சரன் ஐயைந்து
மடியும் வலம்புரி வாய்த்ததவ் வாறே. ௫௨

2918 பன்றியும் பாம்பும் பசுமுசு வானரந்
தென்றிக் கிடந்த சிறுநரிக் கூட்டத்துக்
குன்றுமை கூடித் தராசின் நிறுத்தபின்
குன்றி நிறையைக் குறைக்கின்ற வாறே. ௫௩

2919 மொட்டித் தெழுந்ததோர் மொட்டுண்டு மொட்டினைக்
கட்டுவிட் டோடின் மலர்தலுங் காணலாம்
பற்றுவிட் டம்மனை பாழ்பட நோக்கினாற்
கட்டுவிட் டார்க்கன்றிக் காணவொண் ணாதே. ௫௪

2920 நீரின்றிப் பாயும் நிலத்தினிற் பச்சையாம்
யாவரும் என்றும் அறியவல் லாரில்லை

கூறு மழைபொழி யாது பொழிபுனல்
தேரினிந் நீர்மை திடரினில் லாதே. ருரு

2921 கூகை குருந்தம தேறிக் குணம்பயில்
மோகம் உலகுக் குணர்கின்ற காலத்து
நாகமும் ஒன்று நடுவுரை செய்திடும்
பாகனு மாகின்ற பண்பனு மாமே. ருசு

2922 வாழையுஞ் சூரையும் வந்திடங் கொண்டன
வாழைக்குச் சூரை வலிது வலிதென்பர்
வாழையுஞ் சூரையும் வன்துண்டஞ் செய்திட்டு
வாழை யிடங்கொண்டு வாழ்கின்ற வாறே. ருஎ

2923 நிலத்தைப் பிளந்து நெடுங்கடல் ஓட்டிப்
புனத்துக் குறவன் புணர்ந்த கொழுமீன்
விலக்குமின் யாவர்க்கும் வேண்டிற் குறையா
தருத்தமு மின்றி யடுவது மாமே. ருஅ

2924 தளிர்க்கும் ஒருபிள்ளை தட்டா ணகத்தில்
விளிப்பதோர் சங்குண்டு வேந்தனை நாடிக்
களிக்குங் குசவர்க்குங் காவிதி யார்க்கும்
அளிக்கும் பதத்தோன் றுய்ந்துகொள் வார்க்கே. ருகூ

2925 குடைவிட்டுப் போந்தது கோயில் எருமை
படைகண்டு மீண்டது பாதி வழியில்
உடையவன் மந்திரி யுள்ளளவும் ஊரார்
அடையா நெடுங்கடை ஐந்தொடு நான்கே. சூ0

2926 போகின்ற எட்டும் புகுகின்ற பத்தெட்டும்
ஆகிப் படைத்தன ஒன்பது வாய்தலும்
நாகமும் எட்டொடு நாலு புரவியும்
பாகன் விடாவிடிற் பன்றியு மாமே. சூக

2927 பாசி படர்ந்து கிடந்த குளத்திடைக்
கூசி யிருக்குங் குருகிரை தேர்ந்துண்ணுங்
தூசி மறவன் துணைவழி எய்திடப்
பாசங் கிடந்து பதைக்கின்ற வாறே. சூஉ

2928 கும்ப மலைமேல் எழுந்ததோர் கொம்புண்டு
கொம்புக்கும் அப்பால் அடிப்பதோர் காற்றுண்டு
வம்பாய் மலர்ந்ததோர் பூவுண்டப் பூவுக்குள்
வண்டாய்க் கிடந்து மணங்கொள்வன் ஈசனே. ௬௩

2929 வீணையுந் தண்டும் விரவி யிசைமுரல்
தாணுவும் மேவித் தருதலைப் பெய்தது
வாணிபஞ் சிக்கென் றதுவடை யாமுன்னங்
காணியும் அங்கே கலக்கின்ற வாறே. ௬௪

2930 கொங்குபுக் காரொடு வாணிபஞ் செய்தது
வங்குபுக் காலன்றி ஆய்ந்தறி வாரில்லை
திங்கள்புக் கால்இரு ளாவ தறிந்திலர்
தங்குபுக் கார்சிலர் தாபதர் தாமே. ௬௫

2931 போதும் புலர்ந்தது பொன்னிறங் கொண்டது
தாதவிழ் புன்னை தயங்கு மிருகரை
ஏதமில் ஈசன் இயங்கு நெறியிது
மாத ரிருந்ததோர் மண்டலந் தானே. ௬௬

2932 கோமுற் றமருங் குடிகளுந் தம்மிலே
காமுற்ற கத்தி இடுவர் கடைதொறு
மீவற்ற வெல்லை விடாது வழிகாட்டி
யாமுற்ற தட்டினால் ஐந்துண்ண லாமே. ௬௭

2933 தோட்டத்தில் மாம்பழந் தோண்டி விழுந்தக்கால்
நாட்டின் புறத்தில் நரியழைத் தென்செயும்
மூட்டிக் கொடுத்து முதல்வனை முன்னிட்டு
காட்டிக் கொடுத்தவர் கைவிட்ட வாறே. ௬௮

2934 புலர்ந்தது போதென்று புட்கள் சிலம்பப்
புலர்ந்தது போதென்று பூங்கொடி புல்லிப்
புலம்பி னவளோடும் போக நுகரும்
புலம்பனுக் கென்றும் புலர்ந்திலை போதே. ௬௯

2935 தோணியொன் றுண்டு துறையில் விடுவது
வாணி மிதித்துநின் றைவர்கோ லூன்றலும்
வாணிபஞ் செய்வார் வழியிடை யாற்றிடை
ஆணி கலங்கில் அதுவிது வாமே.

## 228. மோன சமாதி

2936 நின்றார் இருந்தார் கிடந்தார் எனவில்லை
சென்றார்தஞ் சித்த மோன சமாதியாம்
மன்றேயு மங்கே மறைப்பொரு ளொன்றுண்டு
சென்றாங் கணைந்தவர் சேர்கின்ற வாறே.

2937 காட்டுங் குறியுங் கடந்தவர் காரணம்
ஏட்டின் புறத்தில் எழுதிவைத் தென்பயன்
கூட்டுங் குருநந்தி கூட்டிடி னல்லது
ஆட்டின் கழுத்தில் அதர்கிடந் தற்றே.

2938 உணர்வுடை யார்கட் குலகமுந் தோன்றும்
உணர்வுடை யார்கட் குறுதுய ரில்லை
உணர்வுடை யார்கள் உணர்ந்தஅக் காலம்
உணர்வுடை யார்கள் உணர்ந்துகண் டாரே.

2939 மறப்பது வாய்நின்ற மாயநன் னுடன்
பிறப்பினை நீங்கிய பேரரு ளாளன்
சிறப்புடை யான்திரு மங்கையுந் தானும்
உறக்கமில் போகத் துறங்கிடுந் தானே.

2940 துரியங்கள் மூன்றும் கடந்தொளிர் சோதி
அரிய துரிய மதில்மீது மூன்றாய்
விரிவு குவிவு விழுங்கி யுமிழ்ந்தே
உரையில் அநுபூ திகத்தினுள் ளானே.

2941 உருவிலி யூனிலி யூனமொன் றில்லி
திருவிலி தீதிலி தேவர்க்குந் தேவன்
பொருவிலி பூதப் படையுடை யாளி
மருவிலி வந்தென் மனம்புகுந் தானே.

2942 கண்டறி வாரில்லைக் காயத்தின் நந்தியை
எண்டிசை யோரும் இறைவனென் றேத்துவர்
அண்டங் கடந்த அளவிலா ஆனந்தத்
தொண்டர் முகந்த துறையறி யோமே. எ

2943 தற்பர மல்ல சதாசிவன் தானல்ல
நிட்கள மல்ல சகள நிலையல்ல
அற்புத மாகி யநுபோகக் காமம்போற்
கற்பனை யின்றிக் கலந்துநின் றானே. அ

2944 முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்
மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய
சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமா றெங்ஙனே.

2945 அப்பினில் உப்பென அத்தன் அணைந்திட்டுச்
செப்பு பராபரஞ் சேர்பர மும்விட்டுக்
கப்புறு சொற்பத மாளக் கலந்தமை
எப்படி யப்படி என்னுமவ் வாறே. க0

2946 கண்டார்க் கழகிது காஞ்சிரத் தின்பழந்
தின்றார்க் கறியலாம் அப்பழத் தின்சுவை
பெண்டா னிரம்பி மடவிய ளானாற்
கொண்டான் அறிவன் குணம்பல தானே. கக

2947 நந்தி யிருந்தான் நடுவுத் தெருவிலே
சந்தி சமாதிகள் தாமே யொழிந்தன
உந்தியி னுள்ளே யுதித்தெழுஞ் சோதியைப்
புந்தியி னாலே புணர்ந்துகொண் டேனே. க௨

2948 விதறு படாவண்ணம் வேறிருந் தாய்ந்து
பதறு படாதே பழமறை பார்த்துக்
கதறிய பாழைக் கடந்தந்தக் கற்பனை
உதறிய பாழில் ஒடுங்குகின் றேனே. க௩

2949 வாடா மலர்புனை சேவடி வானவர்
கூடார் அறநெறி நாடொறு மின்புறச்
சேடார் கமலச் செழுஞ்சுட ருட்சென்று
நாடார் அமுதுற நாடார் அமுதமே. கச

2950 அதுக்கென் றிருவர் அமர்ந்தசொற் கேட்டும்
பொதுக்கெனக் காமம் புலப்படு மாபோல்
சதுக்கென்று வேறே சமைந்தாரைக் காண
மதுக்கொன்றைத் தாரான் வளர்ந்தரு மன்றே. கரு

2951 தானும் அழிந்து தனமும் அழிந்துநீ
டூனும் அழிந்து உயிரும் அழிந்துடன்
வானும் அழிந்து மனமும் அழிந்துபின்
நானும் அழிந்தமை நானறி யேனே. கசா

2952 இருளும் வெளியும் இரண்டையும் மாற்றிப்
பொருளிற் பொருளாய்ப் பொருந்தவுள் ளாகி
அருளால் அழிந்திடும் அத்தன் அடிக்கே
உருளாத கன்மன முற்றுநின் றேனே. கஎ

2953 ஒன்றிநின் றுள்ளே யுணர்ந்தேன் பராபரம்
ஒன்றிநின் றுள்ளே யுணர்ந்தேன் சிவகதி
ஒன்றிநின் றுள்ளே யுணர்ந்தேன் உணர்வினை
ஒன்றிநின் றேபல வூழிகண் டேனே. கஅ

## 229. வரையுரை மாட்சி

2954 தான்வரை வற்றபி னுரை வரைவது
தானவ னனபி னுரை நினைவது
காமனை வென்றகண் ணுரை யுகப்பது
தூமொழி வாசகஞ் சொல்லுமின் நீரே. க

2955 உரையற்ற தொன்றை யுரைசெய்யு மூமர்காள்
கரையற்ற தொன்றைக் கரைகாண லாகுமோ
திரையற்ற நீர்போல் சிந்தை தெளிவார்க்குப்
புரையற் றிருந்தான் புரிசடை யோனே. உ

2956 மனமாயை மாயைஇம் மாயை மயக்க
மனமாயை தான்மாய மற்றொன்று மில்லை
பிணமாய்வ தில்லை பிதற்றவும் வேண்டா
தனையாய்ந் திருப்பது தத்துவந் தானே. ௫

## 230. அணைந்தோர் தன்மை

2957 மலமில்லை மாசில்லை மானுபி மானங்
குலமில்லை கொள்ளுங் குணங்களு மில்லை
நலமில்லை நந்தியை ஞானத்தி னாலே
பலமன்னி யன்பிற் பதித்துவைப் போர்க்கே. ௧

2958 ஒழிந்தேன் பிறவி யுறவென்னும் பாசங்
கழிந்தேன் கடவுளும் நானுமொன் றானேன்
அழிந்தாங் கினிவரு மாக்கமும் வேண்டேன்
செழுஞ்சார் புடைய சிவனைக்கண் டேனே. ௨

2959 ஆலைக் கரும்பும் அமுதும்அக் காரமுஞ்
சோலைத் தண்ணீரும் உடைத்தெங்கள் நாட்டிடைப்
பீலிக்கண் ணன்ன வடிவுசெய் வாளொரு
கோலப்பெண் ணுட்குக் குறையொன்று மில்லையே. ௩

2960 ஆராலும் என்னை அமட்டவொண் ணாதினிச்
சீரார் பிரான்வந்தென் சிந்தை புகுந்தனன்
சீராடி யங்கே திரிவதல் லால்இனி
யார்பாடுஞ் சாரா அறிவறிந் தேனே. ௪

2961 பிரிந்தேன் பிரமன் பிணித்ததோர் பாசந்
தெரிந்தேன் சிவகதி செல்லு நிலையை
அரிந்தேன் வினையை அயில்மன வாளால்
முரிந்தேன் புரத்தினை முந்துகின் றேனே. ௫

2962 ஒன்றுகண் டீர்உல குக்கொரு தெய்வமும்
ஒன்றுகண் டீர்உல குக்குயி ராவது
நன்றுகண் டீர்இனி நமசிவா யப்பழந்
தின்றுகண் டேற்கிது தித்தித்த வாறே. ௬

2963 சந்திரன் பாம்பொடுஞ் சூடுஞ் சடாதரன்
வந்தென்னை யாண்ட மணிவிளக் கானவன்
அந்தமும் ஆதியும் இல்லா அரும்பொருள்
சிந்தையின் மேவித் தியக்கறுத் தானே. எ

2964 பண்டெங்கள் ஈசன் நெடுமால் பிரமனைக்
கண்டங் கிருக்குங் கருத்தறி வாரில்லை
விண்டங்கே தோன்றி வெறுமன மாயிடில்
துண்டங் கிருந்ததோர் தூறது வாமே. அ

2965 அன்னையும் அத்தனும் அன்புற்ற தல்லது
அன்னையும் அத்தனு மாரறி வாரென்னை
அன்னையும் அத்தனும் யானும் உடனிருந்
தன்னையும் அத்தனை யான்புரந் தேனே. கூ

2966 கொண்ட சுழியுங் குலவரை யுச்சியும்
அண்டரும் அண்டத் தலைவரும் ஆதியும்
எண்டிசை யோரும்வந் தென்கைத் தலத்துளே
உண்டனர் நானினி உய்ந்தொழிந் தேனே. கO

2967 தானே திசையொடு தேவரு மாய்நிற்குந்
தானே வடவரை யாதியு மாய்நிற்குந்
தானே யுடலுயிர் தத்துவ மாய்நிற்குந்
தானே யுலகில் தலைவனு மாமே. கக

2968 நமன்வரின் ஞானவாள் கொண்டே எறிவன்
சிவன்வரின் நானுடன் போவது திண்ணம்
பவம்வரும் வல்வினை பண்டே யறுத்தேன்
தவம்வருஞ் சிந்தைக்குத் தானெதி ராரே. கஉ

2969 சித்தஞ் சிவமாய் மலமூன்றுஞ் செற்றவர்
சுத்தச் சிவமாவர் தோயார் மலபந்தங்
கத்துஞ் சிலுகுங் கலகமுங் கைகாணார்
சத்தம் பரவிந்து தானுமென் றெண்ணியே. கங

2970 நினைப்பும் மறப்பும் இலாதவர் நெஞ்சம்
வினைப்பற் றறுக்கும் விமலன் இருக்கும்

வினைப்பற் றறுக்கும் விமலனைத் தேடி
நினைக்கப் பெறிலவன் நீளிய னாமே. கச

2971 சிவபெரு மானென்று நானழைத் தேத்தத்
தவபெரு மானென்று தான்வந்து நின்றான்
அவபெரு மானென்னை யாளுடை நாதன்
பவபெரு மானைப் பணிந்துநின் றேனே. கரு

2972 பணிந்துநின் றேன்பர மாதி பதியைத்
துணிந்துநின் றேன்இனி மற்றொன்றும் வேண்டேன்
அணிந்துநின் றேனுடல் ஆதிப் பிரானைத்
தணிந்துநின் றேன்சிவன் தன்மைகண் டேனே. கசு

2973 என்னெஞ்சம் ஈசன் இணையடி தாஞ்சேர்ந்து
முன்னஞ்செய் தேத்த முழுதும் பிறப்பறுந்
தன்னெஞ்சம் இல்லாத் தலைவன் தலைவிதி
பின்னஞ்செய் தென்னைப் பிணக்கறுத் தானே. கஎ

2974 பிணக்கறுத் தான்பிணி மூப்பறுத் தெண்ணுங்
கணக்கறுத் தாண்டனன் காணந்தி என்னைப்
பிணக்கறுத் தென்னுடன் முன்வந்த துன்பம்
வணக்கலுற் றேன்சிவம் வந்தது தானே. கஅ

2975 சிவன்வந்து தேவர் குழாமுடன் கூடப்
பவம்வந் திடநின்ற பாசம் அறுத்திட்
டவனெந்தை யாண்டருள் ஆதிப் பெருமான்
அவன்வந்தென் னுள்ளே யகப்பட்ட வாறே. கசூ

2976 கரும்புந் தேனுங் கலந்ததோர் காயத்தில்
அரும்புங் கந்தமு மாகிய ஆனந்தம்
விரும்பியே உள்ளம் வெளியுறக் கண்டபின்
கரும்புங் கைத்தது தேனும் புளித்ததே. உ௦

2977 உள்ள சரியாதி ஓட்டியே மீட்டென்பால்
வள்ளல் அருத்தியே வைத்த வளம்பாடிச்
செய்வன எல்லாஞ் சிவமாகக் காண்டலாற்
கைவள மின்றிக் கருக்கடந் தேனே. உக

2978 மீண்டார் கமலத்துள் அங்கி மிகச்சென்று
தூண்டா விளக்கின் றகளிநெய் சோர்தலும்
பூண்டாள் ஒருத்தி புவனசூ டாமணி
மாண்டா ரொருவன்கை வந்தது தானே. உஉ

2979 ஆறே யருவி யகங்குளம் ஒன்றுண்டு
நூறே சிவகதி நுண்ணிது வண்ணமுங்
கூறே குவிமுலைக் கொம்பனை யாளொடும்
வேறே யிருக்கும் விழுப்பொருள் தானே. உங

2980 அன்புள் உருகி அழுவன் அரற்றுவன்
என்பும் உருவ இராப்பகல் ஏத்துவன்
என்பொன் மணியை இறைவனை யீசனைத்
தின்பன் கடிப்பன் திருத்துவன் தானே. உச

2981 மனம்வி ரிந்து குவிந்தது மாதவ
மனம்வி ரிந்து குவிந்தது வாயு
வனம்வி ரிந்து குவிந்தது மன்னுயிர்
மனம்வி ரிந்துரை மாண்டது முத்தியே. உரு

## 231. தோத்திரம்

2982 மாயனை நாடி மனநெடுந் தேரேறிப்
போயின நாடறி யாதே புலம்புவர்
தேயமும் நாடுந் திரிந்தெங்கள் செல்வனைக்
காயமின் னுட்டிடைக் கண்டுகொண் டேனே. க

2983 மன்னு மலைபோல் மதவா ரணத்தின்மேல்
இன்னிசை பாட இருந்தவ ராரெனில்
முன்னியல் கால முதல்வனார் நாமத்தைப்
பன்னினர் என்றே பாடறி வீரே. உ

2984 முத்தினின் முத்தை முகிழிள ஞாயிற்றை
எத்தனை வானோரும் ஏத்தும் இறைவனை
அத்தனைக் காணா தரற்றுகின் றேனையோர்
பித்தன் இவனென்று பேசுகின் றாரே.

2985 புகுந்துநின் றானெங்கள் புண்ணிய மூர்த்தி
புகுந்துநின் றானெங்கள் போதறி வாளன்
புகுந்துநின் றானடி யார்தங்கள் நெஞ்சம்
புகுந்துநின் றானையே போற்றுகின் றேனே. ௪

2986 பூதக்கண் ணாடியிற் புகுந்திலன் போதுளன்
வேதக்கண் ணாடியில் வேறே வெளிப்படு
நீதிக்கண் ணாடி நினைவார் மனத்துளன்
கீதக்கண் ணாடியிற் கேட்டுநின் றேனே. ௫

2987 நாமமோ ராயிரம் ஓதுமின் நாதனை
ஏமமோ ராயிரத் துள்ளே இசைவீர்கள்
ஓமமோ ராயிரம் ஓதவல் லாரவர்
காமமோ ராயிரங் கண்டொழிந் தாரே. ௬

2988 போற்றுகின் றேன்புகழ்ந் தும்புகழ் ஞானத்தைத்
தேற்றுகின் றேன்சிந்தை நாயகன் சேவடி
சாற்றுகின் றேன்அறை யோசிவ யோகத்தைப்
போற்றுகின் றேன்எம் பிரானென்று நானே. ௭

2989 நாணுவிதஞ்செய்து நாடுமின் நந்தியை
ஊணார் கமலத்தி னூடுசென் றப்புறம்
வானோர் உலகம் வழிப்பட மீண்டபின்
தேனூற வுண்டு தெவிட்டலு மாமே. ௮

2990 வந்துநின் றானடி யார்கட் கரும்பொருள்
இந்திர னாதி இமையவர் வேண்டினுஞ்
சுந்தர மாதர் துழனியொன் றல்லது
அந்தர வானத்தின் அப்புற மாமே. ௯

2991 மண்ணிற் கலங்கிய நீர்போல் மனிதர்கள்
எண்ணிற் கலங்கி இறைவன் இவனென்னார்
உண்ணிற் குளத்தின் முகந்தொரு பால்வைத்துத்
தெண்ணிற் படுத்த சிவனவ னாமே. ௧௦

2992 மெய்த்தவத் தானை விரும்பும் ஒருவர்க்குக்
கைத்தலஞ் சேர்தரு நெல்லிக் கனியொக்குஞ்

சுத்தனைத் தூய்நெறி யாய்நின்ற தேவர்கள்
அத்தனை நாடி அமைந்தொழிந் தேனே. கக

2993 அமைந்தொழிந் தேன்அள வில்புகழ் ஞானஞ்
சமைந்தொழிந் தேன்தடு மாற்றமொன் றில்லை
புகைந்தெழும் பூதலம் புண்ணியன் நண்ணி
வகைந்து கொடுக்கின்ற வள்ளலு மாமே. கஉ

2994 வள்ளற் றலைவனை வானநன் ஞடனை
வெள்ளப் புனற்சடை வேத முதல்வனைக்
கள்ளப் பெருமக்கள் காண்பர்கொ லோஎன்று
உள்ளத்தி னுள்ளே யொளித்திருந் தாளுமே. கரு

2995 ஆளும் மலர்ப்பதந் தந்த கடவுளை
நாளும் வழிபட்டு நன்மையுள் நின்றவர்
கோளும் வினையும் அறுக்குங் குரிசிலின்
வாளு மனத்தொடும் வைத்தொழிந் தேனே. கச

2996 விரும்பில் அவனடி வீர சுவர்க்கம்
பொருந்தில் அவனடி புண்ணிய லோகந்
திருந்தில் அவனடி தீர்த்தமு மாகும்
வருந்தி யவனடி வாழ்த்தவல் லார்க்கே. கரு

2997 வானக மூடறுத் தானிவ் வுலகினில்
தானக மில்லாத் தனியாகும் போதகன்
கானக வாழைக் கனிநுகர்ந் துள்ளூறும்
பானகச் சோதியைப் பற்றிநின் றேனே. கசு

2998 விதியது மேலை யமரர் உறையும்
பதியது பாய்புனற் கங்கையும் உண்டு
துதியது தொல்வினைப் பற்றறு விக்கும்
பதியது வவ்விட்ட தந்தமு மாமே. கஎ

2999 மேலது வானவர் கீழது மாதவர்
தானிடர் மானுடர் கீழது மாதனங்
கானது கூவிள மாலை கமழ்சடை
ஆனது செய்யுமெம் ஆருயிர் தானே. கஅ

3000 சூழுங் கருங்கடல் நஞ்சுண்ட கண்டனை
ஏழும் இரண்டிலும் ஈசன் பிறப்பிலி
யாழுஞ் சுனையும் அடவியும் அங்குளன்
வாழும் எழுத்தைந்து மன்னனு மாமே. கக

3001 உலகம தொத்துமண் ணொத்துயர் காற்றை
அலர்கதிர் அங்கியொத் தாதிப் பிரானும்
நிலவிய மாமுகில் நீரொத்து மீண்டச்
செலவொத் தமர்திசைத் தேவர்பி ரானே. உ௦

3002 பரிசறிந் தங்குளன் அங்கி அருக்கன்
பரிசறிந் தங்குளன் மாருதத் தீசன்
பரிசறிந் தங்குளன் மாமதி ஞானப்
பரிசறிந் தன்னிலம் பாரிக்கு மாறே. உக

3003 அந்தங் கடந்தும் அதுவது வாய்நிற்கும்
பந்த வுலகினிற் கீழோர் பெரும்பொருள்
தந்த வுலகெங்குந் தானே பராபரன்
வந்து படைக்கின்ற மாண்பது வாமே. உஉ

3004 முத்தண்ட வீரண்ட மேமுடி யாயினும்
அத்தன் உருவம் உலகே ழெனப்படும்
அத்தனின் பாதாளம் அளவுள்ள சேவடி
மத்தர் அதனை மகிழ்ந்துண ராரே. உங

3005 ஆதிப் பிரான்நம் பிரானவ் வகலிடச்
சோதிப் பிரான்சுடர் மூன்றொளி யாய்நிற்கும்
ஆதிப் பிரான்அண்டத் தப்புறங் கீழவன்
ஆதிப் பிரான்நடு வாகிநின் றானே. உச

3006 அண்டங் கடந்துயர்ந் தோங்கும் பெருமையன்
பிண்டங் கடந்த பிறவிச் சிறுமையன்
தொண்டர் நடந்த கனைகழல் காண்டொறுந்
தொண்டர்கள் தூய்நெறி தூங்கிநின் றானே. உரு

3007 உலவுசெய் நோக்கம் பெருங்கடல் சூழ
நிலமுழு தெல்லா நிறைந்தனன் ஈசன்

பலமுழு தெல்லாம் படைத்தனன் முன்னே
புலமுழு பொன்னிற மாகிநின் றானே. உசு

3008 பராபர னாகிப்பல் ஊழிகள் தோறும்
பராபர னாயிவ் வகலிடந் தாங்கித்
தராபர னாய்நின்ற தன்மை யுணரார்
நிராபர னாகி நிறைந்துநின் றானே. உஎ

3009 போற்றும் பெருந்தெய்வந் தானே பிறரில்லை
ஊற்றமும் ஓசையும் ஓசை யொடுக்கமும்
வேற்றுடல் தானென் றதுபெருந் தெய்வமாங்
காற்றது ஈசன் கலந்துநின் றானே. உஅ

3010 திகையனைத் துஞ்சிவ னேயவ னாகின்
மிகையனைத் துஞ்சொல்ல வேண்டா மனிதரே
புகையனைத் தும்புறம் அங்கியிற் கூடு
முகையனைத் தும்எங்கள் ஆதிப் பிரானே. உகூ

3011 அகன்றான் அகலிடம் ஏழுமொன் றாகி
இவன்றா னெனநின் றெளியனு மல்லன்
சிவன்றான் பலபல சீவனு மாகி
நவின்றான் உலகுறு நம்பனு மாமே. ௩0

3012 கலையொரு மூன்றுங் கடந்தப்பால் நின்ற
தலைவனை நாடுமின் தத்துவ நாதன்
விலையில்லை விண்ணவ ரோடும் உரைப்பன்
நரையில்லை யுள்ளுறு முள்ளவன் தானே. ௩க

3013 படிகால் பிரமன்செய் பாசம் அறுத்து
நெடியான் குறுமைசெய் நேசம் அறுத்துச்
செடியார் தவத்தினிற் செய்தொழில் நீக்கி
அடியேனை உய்யவைத் தன்புகொண் டானே. ௩உ

3014 ஈசனென் றெட்டுத் திசையும் இயங்கின
ஓசையி னின்றெழு சத்தம் உலப்பிலி
தேசமொன் றாங்கே செழுங்கண்டம் ஒன்பதும்
வாச மலர்போல் மருவிநின் றானே. ௩௩

3015 இல்லனு மல்லன் உளனல்லன் எம்மிறை
கல்லது நெஞ்சம் பிளந்திடுங் காட்சியன்
தொல்லையன் தூயன் துளக்கிலன் தூய்மணி
சொல்லருஞ் சோதி தொடர்ந்துநின் றானே. ௩௪

3016 உள்ளத் தொடுங்கும் புறத்துளும் நாமெனுங்
கள்ளத் தலைவன் கமழ்சடை நந்தியும்
வள்ளற் பெருமை வழக்கஞ்செய் வார்கள்தம்
அள்ளற் கடலை அறுத்துநின் றானே. ௩௫

3017 மாறெதிர் வானவர் தானவர் நாடொறுங்
கூறுதல் செய்து குரைகழல் நாடுவர்
ஊறுவர் உள்ளத் தகத்தும் புறத்துளும்
வேறுசெய் தாங்கே விளக்கொளி யாமே. ௩௬

3018 விண்ணிலும் வந்த வெளியிலன் மேனியன்
கண்ணிலும் வந்த புலனல்லன் காட்சியன்
பண்ணினில் வந்த பயனல்லன் பான்மையன்
எண்ணிலா னந்தமும் எங்கள் பிரானே. ௩௭

3019 உத்தமன் எங்கும் உகக்கும் பெருங்கடல்
நித்திலச் சோதியன் நீலக் கருமையன்
எத்தனை காலமும் எண்ணுவர் ஈசனைச்
சித்தர் அமரர்கள் தேர்ந்தறி யாரே. ௩௮

3020 நிறம்பல எவ்வண்ணம் அவ்வண்ணம் ஈசன்
அறம்பல எவ்வண்ணம் அவ்வண்ணம் இன்பம்
மறம்பல எவ்வண்ணம் அவ்வண்ணம் பாவம்
புறம்பல காணினும் போற்றகி லாரே. ௩௯

3021 இங்குநின் றானங்கு நின்றனன் எங்குளன்
பொங்கிநின் றான்புவ னாபதி புண்ணியன்
கங்குல்நின் றான்கதிர் மாமதி ஞாயி
றெங்குநின் றான்மழை போலிறை தானே. ௪0

3022 உணர்வது வாயுமே யுத்தம மாயும்
உணர்வது நுண்ணறி வெம்பெரு மானைப்
புணர்வது வாயும் புல்லிய தாயும்
உணர்வுடல் அண்டமு மாகிநின் றானே. சக

3023 தன்வலி யாலுல கேழுந் தரித்தவன்
தன்வலி யாலே யணுவினுந் தானொய்யன்
தன்வலி யான்மலை எட்டினுந் தான்சாரான்
தன்வலி யாலே தடங்கட லாமே. சஉ

3024 ஏனோர் பெருமைய னாகிலும் எம்மிறை
ஊனே சிறுமையுள் உட்கலந் தங்குளன்
வானோர் அறியும் அளவல்லன் மாதேவன்
தானே யறியுந் தவத்தின் அளவே. சங

3025 பிண்டாலம் வித்தில் எழுந்த பெருமுளைக்
குண்டாலங் காயத்துக் குதிரை பழுத்தது
உண்டனர் உண்டார் உணர்விலா மூடர்கள்
பிண்டத்துட் பட்டுப் பிணங்குகின் றார்களே. சச

## 232. சர்வ வியாபி

3026 ஏயுஞ் சிவபோக மீதன்றி யோரொளி
ஆயும் அறிவையும் மாயா உபாதியால்
ஏய பரிய புரியுந் தனதெய்துஞ்
சாயுந் தனது வியாபகந் தானே. க

3027 நானறிந் தப்பொருள் நாடவிட மில்லை
வானறிந் தங்கே வழியுற விம்மிடும்
ஊனறிந் துள்ளே உயிர்க்கின்ற ஒண்சுடர்
தானறிந் தெங்குந் தலைப்பட லாமே. உ

3028 கடலிடை வாழ்கின்ற கௌவை யுலகத்
துடலிடை வாழ்வுகொண் டுள்ளொளி நாடி
உடலிடை வைகின்ற உள்ளுறு தேவனைக்
கடலின் மலிதிரைக் காணலு மாமே. ங

3029 பெருஞ்சுடர் மூன்றினும் உள்ளொளி யாகித்
தெரிந்துட லாய்நிற்குந் தேவர் பிரானும்
இருஞ்சுடர் விட்டிட் டிகலிட மெல்லாம்
பரிந்துடன் போகின்ற பல்கோரை யாமே. ச

3030 உறுதியி னுள்வந்த வுள்வினைப் பட்டு
இறுதியின் வீழ்ந்தார் இரணம தாகுஞ்
சிறுதியின் உள்ளொளி திப்பிய மூர்த்தி
பெறுதியின் மேலோர் பெருஞ்சுட ராமே. ரு

3031 பற்றி னுள்ளே பரமாய பரஞ்சுடர்
முற்றினு முற்றி முளைக்கின்ற மூன்றொளி
நெற்றியி னுள்ளே நினைவாய் நிலைதரு
மற்றவ னாய்நின்ற மாதவன் தானே. சு

3032 தேவனு மாகுந் திசைதிசை பத்துளும்
ஏவனு மாம்விரி நீருல கேழையும்
ஆவனு மாமமர்ந் தெங்கு முலகினும்
நாவனு மாகி நவிற்றுகின் றானே. எ

3033 நோக்குங் கருடன் நொடியே மூலகையும்
காக்கு மவனித் தலைவனு மங்குள
நீக்கும் வினையென் நிமலன் பிறப்பிலி
போக்கும் வரவும் புணரவல் லானே. அ

3034 செழுஞ்சடை யன்செம்பொ னேயொக்கு மேனி
ஒழிந்தன வாயு ஒருங்குடன் கூடுங்
கழிந்திலன் எங்கும் பிறப்பிலன் ஈசன்
ஒழிந்தில கேழுல கொத்துநின் றானே. கூ

3035 உணர்வும் அவனே உயிரும் அவனே
புணர்வும் அவனே புலனும் அவனே
இணரு மவன்றன்னை எண்ணலு மாகான்
துணரின் மலர்க்கந்தந் துன்னிநின் றானே. கO

3036 புலமையின் நாற்றமில் புண்ணியன் எந்தை
நலமையின் ஞான வழக்கமு மாகும்

விலமையில் வைத்துள வேதியர் கூறும்
பலமையில் எங்கும் பரந்துநின் றானே. கக

3037 விண்ணவ னாயுல கேழுக்கு மேலுளன்
மண்ணவ னாய்வலஞ் சூழ்கடல் ஏழுக்குந்
தண்ணவ னாயது தன்மையின் நிற்பதோர்
கண்ணவ னாகிக் கலந்துநின் றானே. கஉ

3038 நின்றனன் மாலொடு நான்முகன் தானாகி
நின்றனன் தான்நிலங் கீழொடு மேலென
நின்றனன் தான்நெடு மால்வரை ஏழ்கடல்
நின்றனன் தானே வளங்கனி யாயே. கஙு

3039 புவனா பதிமிகு புண்ணியன் எந்தை
அவனே உலகில் அடர்பெரும் பாகன்
அவனே அரும்பல சீவனு மாகும்
அவனே இறையென மாலுற்ற வாறே. கச

3040 உண்ணின் றொளிரும் உலவாப் பிராணனும்
விண்ணின் றியங்கும் விரிகதிர்ச் செல்வனும்
மண்ணின் றியங்கும் வாயுவு மாய்நிற்குங்
கண்ணின் றிலங்குங் கருத்தவன் தானே. கரு

3041 எண்ணும் எழுத்தும் இனஞ்செயல் அவ்வழிப்
பண்ணுந் திறனும் படைத்த பரமனைக்
கண்ணிற் கவருங் கருத்தில் அதுவிது
உண்ணின் றுருக்கியோர் ஆயமு மாமே. கசா

3042 இருக்கின்ற எண்டிசை அண்டம்பா தாளம்
உருக்கொடு தன்னடு வோங்கவிவ் வண்ணங்
கருக்கொடு எங்குங் கலந்திருந் தானே
திருக்கொன்றை வைத்த செழுஞ்சடை யானே. கஎ

3043 பலவுடன் சென்றஅப் பார்முழு தீசன்
செலவறி வாரில்லை சேயன் அணியன்
அலைவிலன் சங்கரன் ஆதிஎம் மாதி
பலவில தாய்நிற்கும் பான்மைவல் லானே. கஅ

3044 அதுவறி வானவன் ஆதிப் புராணன்
எதுவறி யாவகை நின்றவன் ஈசன்
பொதுவது வான புவனங்கள் எட்டும்
இதுவறி வான்நந்தி எங்கள் பிரானே. கக

3045 நீரும் நிலனும் விசும்பங்கி மாருதந்
தூரும் உடம்புறு சோதியு மாயுளன்
பேரும் பராபரன் பிஞ்ஞகன் எம்மிறை
ஊருஞ் சகலன் உலப்பிலி தானே. உ௦

3046 மூல னுரைசெய்த மூவா யிரந்தமிழ்
மூல னுரைசெய்த முந்நூறு மந்திரம்
மூல னுரைசெய்த முப்ப துபதேசம்
மூல னுரைசெய்த மூன்றும் ஒன்றாமே. உக

3047 வாழ்கவே வாழ்கஎன் நந்தி திருவடி
வாழ்கவே வாழ்க மலமறுத் தான்பதம்
வாழ்கவே வாழ்க மெய்ஞ் ஞானத் தவன்தாள்
வாழ்கவே வாழ்க மலமிலான் பாதமே. உஉ

## சில ஏட்டுப்பிரதிகளிலும் உரைகளிலும் அதிகமாகக் காணப்படும் திருமந்திரச் செய்யுள்கள்

3048 ஆறு சமய முதலாஞ் சமயங்கள்
ஊற தெனவும் உணர்க உணர்பவர்
வேற தறவுணர் வார்மெய்க் குருநந்தி
ஆறி யமைபவர்க் கண்ணிக்குந் தானே. க

3049 உடலாங் குகையில் உணர்வாகும் பீடத்
தடலார் சமாதி இதயத்த தாக
நடமா டியகுகை நாடிய யோகி
மிடையாகா வண்ணமே சாதிக்கு மெல்லவே. உ

3050 நிற்ற லிருத்தல் கிடத்தல் நடையோடல்
பெற்ற வக்காலுந் திருவருள் பேராமற்
சற்றியன் ஞானந்தந் தானந்தந் தங்கவே
உற்ற பிறப்பறற் றுளிர்ஞான நிட்டையே. ௩

3051 நாயோட்டு மந்திரம் நான்மறை வேதம்
நாயோட்டு மந்திரம் நாத னிருப்பிடம்
நாயோட்டு மந்திரம் நாதாந்த சோதி
நாயோட்டு மந்திரம் நாமறி யோமே. ௪

3052 இணங்க வேண்டா இனியுல கோருடன்
நுணங்கு கல்வியும் நூல்களும் என்செயும்
வணங்க வேண்டா வடிவை யறிந்தபின்
பிணங்க வேண்டா பிதற்றை யொழியுமே. ௫

3053 எவ்விடத் துந்தம் பணியின்மை கண்டுளோர்
எவ்விடத் தும்பணி யீசன் பணியென்றே
அவ்விடத் தைங்கரு மத்தால் அறிதலால்
உவ்விடத் தோருக்கோர் உபாய மில்லையே. ௬

3054 ஒத்த சமயங்கள் ஓராறு வைத்திடும்
அத்த னொருவனும் என்ப தறிந்திலர்
அத்தன் ஒருவனும் என்ப தறிந்திடின்
முத்தி விளக்கு முதல்வனு மாமே. ௭

3055 முதலொன்று மானை முதுகுடன் வாலுந்
திதமுறு கொம்பு செவிதுதிக் கைகால்
மதியுடன் அந்தகர் வகைவகை பார்த்தே
அதுகூற லொக்கும் ஆறு சமயமே. ௮

3056 அத்தாளத் தாள மதிலசை விற்கால்
ஒத்தாட வோவாதி யாவேத மூடுற
வைத்தாடி கூடல் தினமான மாகவே
சித்தான நந்திதென் னம்பலத் தாடுமே. ௯

3057 ஆகஞ் சிவானந்த வைவொளி பூரிக்கி
லேக வொளியா மிதய கமலத்தே
தாகமுஞ் சோகமுஞ் சார்கலை யுன்னி
லாக மனங்கசிந் தானந்த மாகுமே. ௧௦

3058 ஆணவ மூலத்தகார முதித்திடப்
பேணியுகாரங் கலாதி பிறிவிக்கத்
தாணு மகாரஞ் சதாசிவ மாகவே
ஆணவ பாச மடர்தல் செய்யாவே. ௧௧

3059 உண்ண லுறங்க லுலாவ லுயிர்போத
நண்ணல் நரக சுவர்க்கத்து நாட்டிடப்
பண்ண லவன்பணி யாலிவன் பாலிடை
திண்ணிதிற் செய்கை சிவன் பணியாமே. ௧௨

3060 ஓடும் இருக்குங் கிடக்கும் உடனெழுந்
தாடும் பறக்கு மகண்டமும் பேசிடும்
பாடும் புறத்தெழும் பல்லுயி ரானந்தம்
கூடும் பொழுதிற் குறிப்பிவை தானே. ௧௩

3061 சித்தஞ் சிவமாம் சிவஞானி சேர்விடம்
சுத்தச் சிவாலயம் தொல்பாவ நாசமாம்
அத்த மழையக மானந்த மேலிடும்
முத்தம் பெருகும் முழுப்பொரு ளாகுமே. ௧௪

3062 திருமந் திரமே சிதம்பரந் தானுந்
திருமந் திரமே சிறந்த உபாங்கந்
திருமந் திரமே திருக்கூத்தின் செய்கை
திருமந் திரமே திருமேனி தானே. ௧௫

3063 திருமேனி தானே திருவரு ளாகுந்
திருமேனி தானே திருஞான மாகுந்
திருமேனி தானே சிவநேய மாகுந்
திருமேனி தானே தெளிந்தார்க்குச் சித்தியே. ௧௬

3064 நெற்றி நடுவுள் நினைவெழு கண்டமு
முற்ற விதையமு மோதிய நாபிக்கீழ்ப்

பெற்ற துரியமும் பேசிய மூலத்தே
யுற்ற வதீத மொடுங்கு முடனே. ௧௭

3065 பத்தி விதையிற் பயிரொன்று நாணத்தைச்
சித்தி தருவை ராக்கத்தாற் செய்தறுத்
துய்த்த சமாதி சிவானந்த முண்டிடச்
சித்தி திகழ்முத்தி யானந்தஞ் சித்தியே. ௧௮

3066 பள்ள முதுநீர் பழகிய மீனினம்
வெள்ளம் புதியவை காண விருப்புறும்
கள்ளவர் கோதையர் காமனோ டாடினும்
உள்ளம் பிரியா ஒருவனைக் காணுமே. ௧௯

3067 பாசம தாகும் பழமலம் பற்றற
நேசம தாய்நின்ற வாறுறு நீங்கிடக்
காசமி லாத குணங்கே வலசுத்த
மாசற நிற்ற லதுசுத்த சைவமே. ௨0

3068 மனவு நனவு கனவது புந்தி
நினைவி லகந்தை சுழினையுள் நிற்றல்
அதனை யறிசித்தந் துரியமிம் மூன்றின்
நினைவறல் மற்றது நேயத் தளவே. ௨௧

3069 மேலைத் திருவம் பலத்தா மிகுகலை
கோலிப் பரானந்த நாதாந்தக் கூத்ததிற்
சீலித்த சித்தர் சிவயோக சித்தராய்
மாலற்ற வர்சுத்த சைவத்து வாழ்வரே. ௨௨

---

திருமூல தேவனையே சிந்தைசெய் வார்க்குக்
கருமூல மில்லையே காண்.

திருமந் திரமே சிவகதிக்கு வித்தாந்
திருமந் திரமே சிவமா—மருமந்த
புந்திக்கு ளேநினைந்து போற்றுமடி யார்தமக்குச்
சந்திக்குந் தற்பரமே தான்.

# பாட்டு முதற்குறிப்பு




| பாட்டு | பாட்டெண் | பாட்டு | பாட்டெண் | பாட்டு | பாட்டெண் |
|---|---|---|---|---|---|
| அகமுக | 2654 | அசத்தொடு | 2065 | அடிவைத் | 1698 |
| அகம்படி | 1874 | அச்சிவன் | 1885 | அடுக்கு | 1144 |
| அகம்புகு | 1804 | அஞ்சனமேனி | 57 | அடுவன | 2616 |
| அகரம் | 1860 | அஞ்சனம்போ | 727 | அடைந்திடு | 1327 |
| அகராதி | 2700 | அஞ்சிட்ட | 1034 | அடைவினில் | 924 |
| அகலிடத் | 4 | அஞ்சில் | 2299 | அணங்கற்ற | 705 |
| அகலிடமா | 1723 | அஞ்சுகஅஞ் | 980 | அணுகினு | 420 |
| அகன்றார் | 1622 | அஞ்சுகடி | 830 | அணுமாதி | 668 |
| அகன்றான் | 448 | அஞ்சுங் | 2269 | அணுவில் | 2008 |
| ,, | 3011 | அஞ்சுடன் | 697 | அணுவின் | 2281 |
| அகாரமுத | 1753 | அஞ்சுமடக் | 2033 | ,, | 2468 |
| ,, | 2699 | அஞ்சுமுக | 1736 | அணுவும் | 2440 |
| அகாரம்உயி | 975 | அஞ்சுளசிங் | 2026 | அணுவுள் | 2010 |
| ,, | 2503 | அஞ்சுளவானை | 977 | அணைதுணை | 216 |
| அகாரவுகார | 951 | அஞ்செழுத்தா | 934 | அண்டங்கட | 3006 |
| அக்கரை | 2899 | அஞ்செழுத்தாலே | 966 | அண்டங்கள் எழி | 2732 |
| அங்கப்பு | 828 | அஞ்சொடு | 2272 | அ...ள்எழு | 1871 |
| அங்கமும் | 2720 | அஞ்சொல் | 1109 | ,, | 2388 |
| அங்கார் | 1890 | அடங்காத | 2741 | அ...ள்ஓ | 2740 |
| அங்கிஉதய | 338 | அடங்கு | 137 | அ...ள்தத் | 2771 |
| அங்கிசெய் | 421 | அடப்பண் | 148 | அண்டஞ்சுரு | 735 |
| அங்கிதம | 2780 | அடிசார | 1603 | அண்டத்தில் | 2777 |
| அங்கிநிறு | 223 | அடிசேர் | 347 | அண்டத்தி | 1362 |
| அங்கிமதி | 864 | அடிதொழ | 2583 | அண்டமுத | 1210 |
| அங்கிமிகா | 87 | அடிமுடி | 88 | அண்டமொ | 521 |
| அங்கியிற் | 858 | அடியாரவரே | 1672 | அண்டம்எழு | 2773 |
| அங்கியெழு | 862 | அடியார்அடி | 2624 | அண்டவொளி | 2806 |
| அங்குச | 2735 | ,, அர | 2740 | அண்ணலைநாடி | 1535 |
| அங்குநின் | 2837 | ,, பர | 48 | அண்ணலைவா | 1505 |
| அங்கேயட | 2356 | அடியும் | 2917 | | |

அண்ணல்அரு 58, 60, 64
அண்ணல்இரு 766
,, 931
,, 2660
அண்ணல்உட 1951
அண்ணிக்கு 1523
அதிபதி 18
அதிமூட 2162
அதீதத்துரி 2199
அதீதத்துளா 2452
அதீதத்துள் 2582
அதுஇது 1186
அதுக்கென் 2950
அதுவரு 788
அதுவறி 3044
அதுவாம் 927
அதுவிது 1154
,, 1231
,, 1503
அதுவித் 1931
அதுவுணர் 1722
அதோமுகங் 524
அதோமுகமா 525
அத்தத்தில் 2424
அத்தனருளி 2062
அத்தனவ 1829
அத்தன்அமை 2123
அத்தாள 3056
அத்திசை 936
,, 1733
அத்திப்பழ 160
அந்தக்கரு 2647
அந்தங்கட 3003
அந்தணரா 224
அந்தண்மை 234
அந்தநடு 1089
அந்தமில்ஞா 1913
அந்தமில்லா 1031
அந்தமின்ஞா 1910
அந்தமும்ஆதி 1927
,, 2594
அந்தமும்ஈறு 1266
அந்தமோராறு 2371
அந்தம்பதி 1076
அந்தரஞ்சு 2237
அந்திப்பன் 1504
அந்திவண் 46
அந்நெறிஇங் 551
அந்நெறிநாடி 1546
அப்பகை 528
அப்பணி 343
அப்பது 1261
அப்பரிசெண் 409
அப்பரிசேஅயன் 356
அ...சேயயனுர் 355
அப்பனே 36
அப்பினில்உப் 2945
அப்பினிற்கூர் 136
அப்பும் 2266
அமரத்து 2832
அமர்ந்த 925
அமலம்பதி 895
அமுதச்சசி 1959
அமுதப்புனல் 881
அமுதமதாக 1408
அமுதூறு 248
அமைச்ச 1630
அமைந்தொழி 2993
அம்பர 2673
அம்பலம்ஆட 2759
அம்பலமாவ 2775
அம்பன்ன 1147
அம்புய 1003
அம்மனே 1253
அம்முதல் 1264
அம்மையும் 1254
அயலும் 11
அயின்ற 872
அரகர 916
அரசுட 1667
அரனடி 43
அரனன்பர் 2391
அரனெறியப் 1543
அரனெறியா 1562
அரன்துடி 2799
அரன்முத 2260
அரிக்கின்ற 2877
அரித்த 597
அரிபிரம 358
அருங்கரை 1498
அருடரு 2714
அருட்கண் 1808
அருந்தி 1933
அருமைவல் 548
அருவினில் 960
அருளது 1821
அருளல்ல 475
அருளால்அமு 1801
,, அர 1676
அருளான 2341
அருளிற்பிற 1800
அருளிற்றலை 1814
அருளும் 168
அருளெங்கு 1798
அருளேசகல 1806
அருள்பெற்றகா 2599

அருள்பெற்றவ 1071
அரைக்கின்ற 436
அலர்ந்திரு 357
அலைகடல் 363
அவமுஞ்சிவ 2340
அவளையறி 1053
அவனிவளு 767
அவனிவன்ஈச 2620
அவனும் 1789
அவனைஒழி 6
அவன்பால் 1880
அவிழ்க் 66
அவ்வவர் 613
அவ்வழி 2644
அவ்விட்டு 932
அவ்வியம் 196
அவ்வியல் 942
அவ்வின 1269
அவ்வுண்டு 933
அவ்வுலக 1652
,, 1869
அவ்வென்ற 953
அவ்வொடு 957
அழிகின்றஆ 742
,, சா 2587
,, வி 1936
,, வோ 2140
அழிதக 1864
அழுக்கினை 254
அளகநன் 849
அளக்கும் 779
அளந்து 2591
அளந்தேன் 1125
அளவில் 103
அளித்தான் 123
அளியார் 401
அளியொத்த 1064
அறங்கேட்டு 300
அறம்அறி 262
அறவன் 1616
அறிகின்ற 452
அறிகின்றிலா 2323
அறிந்தணு 2414
அறிந்தபரா 682
அறிந்தபிர 1291
அறிந்திடுஞ் 1263
,, 1346
,, 1284
அறிந்திடுவார் 1328
அறிந்துணர் 1588
அறியகி 2350
அறியவொ 1572
அறியாதவ 2224
அறியாதழி 1952
அறியாப் 1879
அறியீருட 469
அறிவது 787
அறிவரு 1009
அறிவறிகி 2206
அறிவறியா 2363
,, 2580
அறிவறிவா 2361
அறிவறிவென் 2362
,, 2405
,, 2637
அறிவாயசத் 617
,, 2471
அறிவாய்அறி 2019
அறிவார்அமர 512
,, 545
அறிவார்அறி 2581
,, பரா 1054
அறிவான 1133
அறிவிக்கவே 2327
அறிவில் 1799
அறிவின்றி 2247
அறிவுக்கழி 2358
அறிவுக்கறி 2808
அறிவுடன் 1554
அறிவுடையார் 2364
அறிவுடையான 2636
அறிவும்அடக் 1471
அறிவுவடி 2357
அறிவை 119
அறிவொன்றி 2181
அறுகாற 1497
அறுத்தன 213
அறுநான்கு 2267
அற்றதுரை 2595
அற்றவிடத் 952
அற்றுநின்று 253
அனாதிசீவ 2401
அனாதிபசு 2236
அன்பினுள் 279
அன்பின்உரு 1456
அன்புசிவம் 270
அன்புடனே 1005
அன்பும்அறி 416
அன்புள் 2980
அன்புறு 282
அன்றுகு 2400
அன்றிய 2001
அன்றிரு 1388
அன்றுநின் 1762
அன்னதுரி 2508
அன்னத்தில் 1965
அன்னமிரண் 2006
அன்னம் 1966

அன்னிய 1485
அன்னையும் 2965
ஆக்ஞ் 3057
ஆகமதத்த 2023
ஆகமம் 1429
ஆகாசஅக் 1262
ஆகாசமாமு 2774
ஆகாசவண் 2809
ஆகாயமாதி 400
ஆகியகோத 1224
ஆகியசூக்க 2416
ஆகியவச்சோ 2493
,, 2570
ஆகின்றகா 677
,, கே 2232
,, சக் 945
ஆகின்றசத் 1732
,, சந்த 1368
,, சந்திர 685
,, ,, 852
,, தன் 395
,, தொ 2179
,, நந் 1847
,, நா 1219
,, பா 941
,, மண் 1381
,, மின் 680
,, மூல 1380
,, மூவ 1077
,, வத் 674
ஆகுங்கலா 2399
ஆகுங்கலை 1990
ஆகுஞ்சன 739
ஆகுதிவேட் 215
ஆகும்அனுதி 2379
,, உட 1710
ஆகும்உபா 2422
ஆக்குகின்று 451
ஆங்கவை 1749
ஆங்குவட 999
ஆசான்முன் 2163
ஆசூசமில் 2552
ஆசூசம் 2551
ஆசையறு 2615
ஆடம்பர 1655
ஆடல் 2781
ஆடியகாலி 2317
,, காலு 2760
ஆடியும் 1816
ஆட்கொண்ட 2121
ஆணவச்சத் 398
ஆணவத்தா 2240
ஆணவந்துற் 500
ஆணவமாகும் 2241
,, 2259
ஆணவமாதி 2183
ஆணவமாயை 2192
ஆணவமூல 3058
ஆணையமாய் 1131
ஆண்டான் 537
ஆண்டுபல 178
ஆண்மிகில் 478
ஆதனமீதில் 1922
ஆதாரசோ 1492
,, 1707
ஆதாரமா 1754
ஆதாரயோ 709
ஆதிஅனாதி 1120
,, 1124
ஆதித்தனுள் 1980
ஆதித்தனோ 1981
ஆதித்தன்அன் 1977
,, ஓடி 1986
,, சந் 410
,, தோ 2342
ஆதிநட 2787
ஆதிபடை 447
ஆதிபரஞ் 2190
ஆதிபரந் 1767
ஆதிபரன் 2751
ஆதிபரா 2543
ஆதிப்பிரானும் 104
ஆதிப்பிரானுல 1570
ஆதிப்பிரான்அ 319
,, த 2646
,, ந 3005
ஆதியனாதிய 1114
ஆதியுமாய் 15
ஆதியும்அந்த 2453
ஆதியைவேத 555
ஆதியோடந்த 381
ஆதிவயிரவி 1099
ஆதிவித 1069
ஆத்தமனை 201
ஆமதுவங்கி 1223
ஆமத்தினி 973
,, 1213
ஆமயன் 1208
,, 1241
ஆமவரி 2233
ஆமாக்கள் 2884
ஆமாறறிந் 2846
ஆமாறறியா 507
,, 2046
ஆமாறுரை 1561
ஆமுயிர்கே 2229

ஆமுயிர்த்தே 877
ஆமேஅதோ 1412
ஆமேஅழி 772
ஆமேஎழு 1303
ஆமேசதா 1350
,, சிவ 891
,, பிரா 1569
,, பொன் 887
,, யனை 1342
,, வப் 1293
,, வபா 120
,, ழுலகு 373
ஆமையொன் 1206
ஆம்விதி 195
ஆயத்துள் 1530
ஆயபதி 2411
ஆயனநந்தி 2658
ஆயிழையா 1220
ஆயுஞ்சிவா 923
ஆயுமலரின் 1711
,, 2359
ஆயும்அறிவு 1239
,, அறிவோ 1805
,, பொய் 2275
,, பொருளு 796
ஆய்ந்தறி 1571
ஆய்ந்துகொள் 296
ஆய்ந்துணை 1566
ஆய்ந்துரை 802
ஆய்வரும் 700
ஆரறிவா 95
ஆராதனை 1831
ஆராலும் 2960
ஆரியனல்ல 565
ஆருமறியார் 786
ஆரும்அறியாத 450
ஆரும்அறியார் 1751
,, உரை 1305
ஆருயிரா 1110
ஆரேஅறி 2126
ஆரேதிரு 1200
ஆர்க்கும் 250
ஆர்த்தெழு 157
ஆர்வமன 2091
ஆர்வம்உடை 273
ஆலமுண்டா 1211
ஆலயமாக 919
ஆலிக்கு 1161
ஆலிங்கன 378
,, 2908
ஆலைக்கரும்பு 2959
ஆவதறியா 2475
ஆவதுதெற்கு 2564
ஆவனஆவ 504
,, 2175
ஆவிக்கமல 1842
ஆவினமான 1267
ஆவின்கிழ 1122
ஆவுடையா 2384
ஆவையும் 243
ஆழிவல 349
ஆளும்மலர் 2995
ஆறங்க 55
ஆறதுகால் 703
ஆறதுவாகு 695
ஆறந்தமாகி 2129
ஆறந்தமுங் 1709
ஆறந்தமுஞ் 2382
ஆறாறகன்ற 2569
ஆறாறகன்றுத 2345
,, ந 2291
ஆறாறதாங்கலை 853
ஆறாறமை 2509
ஆறாறில் 2197
ஆறாறின் 2020
ஆறாறுகாரி 2502
,, குண்ட 2419
,, க்கப் 2271
,, தத் 2447
,, நீங் 2499
,, மாற 2263
ஆறிடும் 1861
ஆறிட்ட 2849
ஆறியிரு 1139
ஆறிருபத் 1300
ஆறுசமயமுங் 1533
ஆறுசமயமுத 3048
ஆறுதெருவி 2868
ஆறுபறவை 2905
ஆறுமுக 2758
ஆறும்இரு 746
ஆறெட்டெழு 930
ஆறெழுத்தா 994
ஆறெழுத்தோ 962
ஆறேயருவி 2530
,, 2979
ஆறைந்துபன் 1940
ஆறொடுமுப் 2656
ஆற்றரு 517
ஆற்றிற் 1642
ஆற்றுகிலா 35
ஆனசமய 1545
ஆனத்தி 2736
ஆனநட 2727
ஆனந்ததத் 2298
,, மாகு 2326
,, மூன் 892

